# இந்தியாவின் கதை

(கி. மு. 3000 முதல் கி. பி.
1978 வரை நடந்துள்ள
முழுமையான வரலாற்று
நிகழ்ச்சிகள்)

சி. ஆர். கண்ணன்

மருதமலையான் பதிப்பகம்
33, பொன்னுச்சாமி நாயக்கன் தெரு,
ராயப்பேட்டை : : சென்னை—600014.

மருதமலையான் பதிப்பக வெளியீடு: 9



முதற் பதிப்பு: —செப்டம்பர், 1978



தயாரிப்பு: தேவகோட்டை லெ. இராமநாதன்

விலை ரூ. 4-00




அச்சிட்டோர் :
வீரபத்திரர் அச்சகம்,
சென்னை—600 005.

# உங்களுடன் ஒரு நிமிஷம்!

பாரதம் பாரம்பரியம் மிக்க நாடு. உலக நாடுகள் பலவற்றில் நாகரிகம் பரவத் தொடங்குவதற்கு முன்னரே மிகச் சிறந்த நாகரிகமும் கலாச் சாரமும் கொண்டு விளங்கிய நாடு. இந்தப் பாரம்பரியத்தையும் நீண்ட நெடும் வரலாற்றையும் பற்றி இன்றைய தலைமுறையினர் தெரிந்து கொள்ள வேண்டாமா? எதையுமே கதையாகச் சொல்லும் போது மிகுந்த பயன் அளிக்கும் அல்லவா! இந்த எண்ணத்தின் அடிப்படையில் உருவானதுதான் இந்தியாவின் கதை.'

இந்த நூலின் பின்னணி பற்றிக் குறிப்பிடுவது அவசியமாகிறது.

எனது பாட்டனூர் பேராசிரியர் பி. டி. சீனிவாச அய்யங்கார் நிறைய வரலாற்று ஆராய்ச்சிகள் செய்து எண்ணற்ற நூல்கள் எழுதியுள்ளவர். அவற்றின் ஆதாரத்தில்—அவர் எழுதிச் சென்றிருந்த குறிப்புகள் துணையுடன் இந்த நூலை எழுதினேன். இதில் குறைகள் இருப்பின் அவை என்னையே சேரும்.

இந்த நூலை அவருடைய நினைவுக்கு என் அன்புக் காணிக்கையாக சமர்ப்பிக்கிறேன்.

சி. ஆர். கண்ணன்

சென்னை—90

1—9—78

# பதிப்புரை

இந்தியாவின் முழுமையான வரலாற்றைத் தெரிந்துகொள்ள இப்புத்தகத்தைப் படித்தாலே போதும். ஆதி மனிதனின் காலம் முதல்—சுமார் கி. மு. 3000 ஆண்டுகளிலிருந்து கி. பி. 1978 வரையில் நடந்துள்ள நிகழ்ச்சிகள் அனைத்தும் இப்புத்தகத்தில் இடம் பெற்றுள்ளன. ஒருமுறைக்கு இருமுறை படிக்கத் தூண்டும் அளவு இப்புத்தகத்தை சரளமான நடையில் சுவையாக எழுதியுள்ளார் இப்புத்தகத்தின் ஆசிரியர் திரு. சி. ஆர். கண்ணன் அவர்கள்.

உங்கள் முன் ஒரு வரலாற்றைப் படைத்திருக்கிறோம். வாசகர்களாகிய நீங்கள்தான் இதைப் படித்துவிட்டு இது முழுமையான வரலாறு என்று கூற வேண்டும். உங்களின் நற் கருத்துக்கள்தான் எங்களின் வளர்ச்சிக்கு ஒரு படிக்கல்லாக அமையும்.

அன்பன்

லெ. இராமநாதன்

# இந்தியாவின் கதை

## 1. ஆதிமனிதன்

இவ்வளவு என நிர்ணயித்துக் கூறப்பட முடியாத பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் மனிதன் இந்தியாவில் வசிக்கத் தொடங்கினான். அப்போது அவனுக்கு வீடுகள் இருந்ததில்லை. நிரந்தரமான வாசஸ்தலமும் கிடையாது. நிலையற்று, சுற்றித்திரிபவனாகவே அவன் வாழ்ந்து வந்தான். கிழங்குகளையும் காட்டுக் கனிகளையும் உண்டு, அவசியம் நேர்ந்தபோதெல்லாம் மரங்களின்மீதோ, அல்லது குகைகளின் உள்ளோ ஒளிந்து மறைந்து வாழ்க்கை நடத்தினான். படிப்படியாக அவன் மிருகங்களின் மாமிசத்தை உண்ணத் தொடங்கினான், அப்போது அவன் சிறந்த வேட்டைக்காரனாக மாறினான். புலி, யானை, காட்டெருமை போன்றவற்றை வேட்டையாடினான்—காரணம் அவை அவனது எதிரிகளாக விளங்கின. மானையும் காட்டு ஆடுகளையும் கொல்லத் தொடங்கினான்—அவற்றின் மாமிசம் அவனுக்கு உணவாகப் பயன்பட்டது.

விரைவில் மனிதன் தனக்குத் தேவையான ஆயுதங்களை மரம் அல்லது கல்லைக் கொண்டு தயாரிக்கக் கற்றுக் கொண்டான். மூங்கிலைப் பிளந்து அவற்றின் முனைகளில் உலர்ந்த

கொடிகளைக் கட்டி வில்லைத் தயாரித்தான். வில்லைப் பயன் படுத்தி நீண்ட முட்களை ஆயுதமாகச் செலுத்தி வேட்டையாடினன். மலையடிவாரங்களிலிருந்து கற்களைத் தேடி எடுத்து அவற்றைச் செதுக்கி கூறிய முனைகளைக்கொண்ட ஆயுதங்களை உருவாக்கினன். இந்தக் கல் ஆயுதங்களைக் கொண்டு மண்ணுக் கடியிலிருந்து கிழங்குகளைத் தோண்டியெடுத்தான். தான் கொன்ற மிருகங்களின் மாமிசத்தை வெட்டுவதற்கும் அவற்றின் தோலை சுரண்டுவதற்கும் இந்த ஆயுதங்களை அவன் பயன்படுத்தினன்.

மரத்துடன் மரத்தை உராய்வதாலும், கல்லுடன் கல்லை மோதுவதாலும் நெருப்பு உண்டாக்க முடியும் என்பதைத் தெரிந்து கொண்ட மனிதன் தன் உணவை சமைத்துச் சாப்பிடத் தொடங்கினன். நெருப்பில் வாட்டியதன் காரணமாக அவனுடைய உணவு மிருதுவாகவும், ருசியுள்ளதாகவும் ஆயிற்று. ஒரு இடத்தில் கிடைக்கக்கூடிய உணவுப் பொருட்கள் அனைத்தையும் தின்று தீர்த்துவிட்டபோது, அவன் அங்கிருந்து கிளம்பி வேறு இடம் நாடிச்சென்முன். அவனுக்கு நிலையான வசிக்கும் இடம் என்று ஒன்று இருந்ததில்லை. அவனுடைய சுற்றத்தார் இறந்த போது அவர்களுடைய சடலங்களைப் பறவைகளும் மிருகங்களும் உண்ணுமாறு அந்தந்த இடங்களிலேயே விட்டுச் சென்முன் அவன்.

நீண்ட காலத்துக்குப் பின்னர் மனிதன் தன்னுடைய கல் ஆயுதங்களைத் தேய்த்து மிருதுவாக்கத் தெரிந்து கொண்டான். இந்தக் காலம் 'புதிய கற்காலம்' என அழைக்கப் பட்டது. அதற்கு முந்திய நாட்கள் 'பழைய கற்காலம்' எனக் கூறப்பட்டது. புதிய கற்காலம் சுமார் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகத்தான் தோன்றியது. அப்போது மனிதர்கள் எண்ணிக்கையில் மிகுந்திருந்தனர். இந்த நாட்டின் பல பகுதிகளிலும் பரவியிருந்தனர்.

மனிதன் மிருகங்களைப் பழக்கப் படுத்தத் தொடங்கினன். வேட்டையில் உதவும் பொருட்டு நாய் முதலில் பழக்

கப் படுத்தப்பட்டது. தொடர்ந்து பாலுக்காகவும் மாமிசத் துக்காகவும் எருமை, பசு, ஆடு ஆகியவை வளர்க்கப்பட்டன. எருதும், கழுதையும் சுமைகளைத் தூக்கிச் செல்லப் பயன் படுத்தப்பட்டன. இவ்வாறு நிலையின்றி அலைந்து திரியும் வேடுவனாக வாழ்ந்த ஆதி மனிதன் நிரந்தரமாக ஒரு இடத் தில் தங்கி மந்தைகளைப் பராமரிக்கத் தொடங்கினான்.

இப்போது அவன் வசிப்பதற்கு வீடுகளைக் கட்டிக் கொண் டான். அவற்றின் சுவர்கள் களிமண் அல்லது மரத்தைக் கொண்டும் வீடுகளின் கூரைகள் மூங்கில், பனை இலைகள் ஆகிய வற்றைக் கொண்டும் கட்டப்பட்டன. களிமண்ணைக் கொண்டு அவன் பானைகளையும் தயாரித்தான். அவை சமைப்பதற்கும் அரிசி, மற்றும் இதர தானியங்களை சேமித்து வைப்பதற்கும் பயன்பட்டன. மேலும் இறந்தவர்களைப் புதைப்பதற்கும் பானைகள் உபயோகப்படுத்தப்பட்டன. ஆதி மனிதன் இறந்தபோது அவனது உடல் உட்கார்ந்த நிலையில் பானைக்குள் வைக்கப்பட்டது. உணவுப் பொருட்களும் அவன் வாழ்ந்த காலத்தில் பயன்படுத்திய ஆயுதங்களும் அந்தப் பானையினுள் அவன் எதிரில் வைக்கப்பட்டன. பானை பூமிக் கடியில் புதைக்கப்பட்டது.

மந்தைகளைப் பராமரித்து வாழ்ந்து வந்த பூர்வீக இந்தியன் விரைவில் நிலங்களை உழுது பயிரிடத் தொடங்கி னான். ஆறுகளிலிருந்து தேவையான தண்ணீரை வாய்க்கால் களின் மூலம் தன்னுடைய நிலத்துக்குக் கொண்டுவந்து நெல் பயிரிட்டான். ஏரியிலிருந்தும் கிணறுகளிலிருந்தும் தண்ணீர் பாய்ச்சி இதர தானியங்களையும் பயிர் செய்தான். பழ மரங் களையும் வளர்த்தான். அப்போது முதல் தானியங்கள் அவ னது முக்கிய உணவாயிற்று. உணவுக்கு ருசியூட்ட மாமிசத்தையும், பழங்களையும் கறியாக அவன் பயன்படுத் திக்கொண்டான்.

தட்சிண பீடபூமியில் அதிக அளவில் விளைந்த பருத்தி யிலிருந்து பூர்வீக இந்தியன் பஞ்சு சேகரிக்கத் தொடங்கினான்.

பஞ்சை நூலாக்கி, நூலைக்கொண்டு துணிகளை நெய்தான். ஆடுகளின் ரோமத்தைக் கொண்டு கம்பளிகளையும் தயாரித்தான். ஆயினும் சீதோஷ்ண நிலை காரணமாகக் கம்பளியைவிட பருத்தி ஆடைகளே அவன் வாழ்வில் பிரதான இடம் பெற்றிருந்தன. வண்டிகள் செய்து அதில் எருதுகளைப் பூட்டினன் அவன். ஆற்றுச் சமவெளிப் பகுதிகளில் விளைந்த பயிர்களையும் (முக்கியமாக அரிசி) மற்றும் ஆற்றுக்கு வெகு தூரத்தில் இருந்த வரண்ட பகுதிகளில் விளைந்தவற்றை இந்த வண்டிகளில் ஏற்றி கடற்கரைப் பகுதிகளுக்கு எடுத்துச் சென்று பண்டமாற்றுதல் செய்து மீன், உப்பு முதலானவற்றைப் பெற்றான், மரவீடுகள், வண்டிகள், படகுகள், மற்றும் இதர கல், மர, கருவிகளையும் ஆயுதங்களையும் தயாரித்தவர்கள் மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டனர்.

பழைய கற்கால மனிதன் பெரும்பாலும் மலைப்பிரதேசங்களிலேயே வசித்து வந்தான். ஆற்றுச் சமவெளிப் பகுதிகள் சதுப்புப் பிரதேசமாக—மனிதன் வசிக்கலாயக்கற்றவையாக இருந்தன. ஆயினும் புதிய கற்காலத்தில் மக்கள் ஆற்றுச் சமவெளிப் பகுதிகளுக்கும் பரவினர். சிந்து, கங்கை, கோதாவரி, கிருஷ்ண, காவேரி, தாமிரவருணி ஆகிய ஆறுகளின் பிரதேசங்களில் மக்கள் பெருகினர். பயிர்த் தொழில் பெரிதும் வளர்ச்சி பெற்றது.

கற்காலம் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு நீடித்தது. பின்னர் தாதுப் பொருள்களிலிருந்து உலோகங்களைப் பிரித்தெடுக்கும் முறைகளை மனிதன் தெரிந்து கொண்டான். தெற்கே இரும்புத் தாதுவிலிருந்து இரும்பை பிரித்தெடுக்கத் தொடங்கினர்கள். அதைக் கொண்டு பலதரப்பட்ட கருவிகளைச் செய்தார்கள். கற்களாலான கருவிகளைவிட இரும்புக் கருவிகள் செய்வது அவர்களுக்கு எளிதாக இருந்தது. அது மட்டுமின்றி அவை சிறந்த முறையிலும் பயன்பட்டன. எனவே படிப்படியாக அவை கற்கருவிகளின் இடத்தைப் பெற்றன. இரும்பு மட்டுமின்றி தங்கம், வெள்ளி ஆகியவற்

றையும் பிரித்தெடுக்க அவர்கள் கற்றுத் தேர்ந்தனர். அவை முக்கியமாக நகைகள் செய்யப் பயன்பட்டன.

வட இந்தியாவில் தாமிரம் முதன் முதலாகக் கண்டு பிடிக்கப்பட்டது. அங்கு வாழ்ந்த மக்கள் தாமிரத்தைத் திண்மையானதாக—எஃகின் கடினத் தன்மையை அடையும் படியாகச் செய்யும் வழிவகைகளை அறிந்திருந்தனர். தாமிரத்தையும் ஈயத்தையும் உருக்கிப் புதிய கலவையாக வெண்கலத்தை உருவாக்கினார்கள். அது வலுமிகுந்ததாக விளங்கியது? தென்னகத்தில் தயாரிக்கப்பட்ட இரும்புக் கருவிகள் வட இந்தியாவுக்குச் சென்றன. அவர்கள் தங்க, வெள்ளி நகைகளுடன் வீட்டுக்குத் தேவையான பாத்திரங் களையும் உலோகத்தைக் கொண்டு செய்யத் தொடங்கினார் கள்.

வட இந்தியாவில் வீடுகள் செங்கல்லைக் கொண்டு கட்டப் பட்டன. தென் பிராந்திய மக்களைப்போல அவர்கள் வீடு கட்ட மரத்தைப் பயன்படுத்தவில்லை. நெருப்பிலிட்டு சுட்டும் சூரிய ஒளியில் காயவைத்தும் அவர்கள் செங்கல்லைத் தயாரித் தார்கள். அவர்களது கோயில்களும் செங்கல்லைக் கொண்டே கட்டப்பட்டன. ஆனால் அப்போது தெற்கே கோயில்கள் மரத்தினாலேயே கட்டப்பட்டன.

உலோக காலத்தில் வாழ்ந்த மக்கள் மிகவும் நாகரிகம் அடைந்து விளங்கினர். சிந்து சமவெளியில் ஆராய்ச்சியா ளர்கள் மொஹஞ்சதாரோ, ஹரப்பா ஆகிய சிதிலமடைந்து புதைந்திருந்த நகரங்களைக் கண்டு பிடித்தபோது அக்கால மக்களின் உன்னத வாழ்க்கை நிலையை அவை எடுத்துக் கூறின.

அந்தக் காலத்தில் வாழ்ந்த மக்கள் தாங்கள் வசித்த பகுதிகளின் இயற்கை சூழ் நிலைக் கேற்பவே தங்கள் வாழ்க் கையையும் அமைத்துக் கொண்டிருந்தார்கள். மலைப் பிர தேசத்தை யொட்டி வாழ்ந்தவர்கள் வேட்டைக்காரர்களாக வும் வீரர்களாகவும் உலோக வேலைக்காரர்களாகவும் இருந்த

னர். புல்வெளிகள் நிறைந்த கானகப் பகுதிகளை யொட்டி வசித்தவர்கள் ஆடு மாடுகளை வளர்த்து மந்தைகளைப் பராமரிப்பவர்களாக இருந்தனர். அவர்களது வாழ்க்கை குதூகலம் நிறைந்து விளங்கியது. கடற்கரைப் பகுதிகளில் இருந்தவர்கள் சிறந்த முறையில் மீன் பிடிப்பவர்களாகவும் உப்பு சேகரிப்பவர்களாகவும் கடற்பயணங்களில் ஈடுபாடுகொண்டவர்களாகவும் விளங்கினுர்கள்.

கடற்கரைப் பகுதிகளில் வசித்த மக்களே இந்தியாவின் முதல் வியாபாரிகளாக இருந்தனர். வணிகத் துறையில் ஈடுபடுவது அவர்களது அவசியத் தேவையாயிற்று. அவர்கள் வாழ்ந்த பகுதிகளில் உப்பும் மீனுமே மிகுதியாகக் கிடைத்தன. எனவே நாட்டின் உட்பகுதிகளுக்கு அவற்றை எடுத்துச் சென்று, பண்டமாற்று முறையில் அரிசியையும் இதர உணவுப் பொருள்களையும் பெற்றனர்.

ஆறுகளின் கீழ் பகுதிகளில் வசித்த மக்கள் நிலங்களை உழுது பயிரிட்டு அரிசி, கோதுமை போன்றவற்றைச் சாகுபடி செய்தனர். பருத்தியும் விளைந்தது. அதைக் கொண்டு அவர்கள் துணிகளை நெய்தனர். தேவைக்குமேல் இருந்த பொருள்களைக் கிடங்குகளில் சேமித்து வைத்து இதர பகுதிகளில் வசித்த மக்களுக்கு விற்பனை செய்யத் தொடங்கினுர்கள். அதன் விளைவாக அவர்களது செல்வம் பெருகத் தொடங்கியது. இதர பகுதி மக்களைவிட அவர்களது வாழ்க்கை வளம் நிறைந்ததாகவும் நாகரிகம் மிக்கதாகவும் விளங்கியது. அவர்கள் வாழ்ந்த பகுதிகளில் பெரும் நகரங்கள் எழுந்தன. பிரதிஸ்தானு (அலகாபாத்), பனுரஸ் (காசி), நாஸிக், மதுரை, திருச்சிராப்பள்ளி ஆகிய நகரங்கள் அக்காலத்தில் சிறப்புற்று விளங்கின. மலைப் பிராந்தியங்களில் ஆட்சி புரிந்தவர்களைவிட இப்பகுதி மன்னர்கள் வலு மிகுந்தவர்களாக விளங்கினுர்கள். வேத காலத்தின் மிகச் சிறந்த அரசாட்சிகளில் பெரும்பான்மையானவை சிந்து, கங்கை சமவெளிகளிலேயே நடந்தன.

அந்தக் காலத்திலேயே மக்கள் தெய்வங்களை வழி படுவதில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்களாக விளங்கினார்கள். துயரம் சூழ்ந்த போதும், நிறை வேற்றப்பட வேண்டிய— குழந்தைகள், செல்வம், போர்களில் வெற்றி போன்ற லட்சியங்களுக்காகவும் அவர்கள் தெய்வங்களை நாடித் தங்கள் படையல்களைச் செலுத்தினார்கள். மாமிசம், அரிசி, மது ஆகியவை அவர்கள் சமர்ப்பித்த படையல்களாக இருந்தன. மற்றும் தெய்வங்களின் சன்னிதிகளில் அவர்கள் பாடியும் நாட்டியமாடியும் தங்கள் வேண்டுதலைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

அந்தந்தப் பிரதேசங்களுக்குத் தகுந்தவாறு அவர்களது தெய்வங்கள் மாறுபட்டிருந்தன. மலைப்பகுதிகளில் வணங்கப்பட்ட தெய்வம் வேல்கொண்டு வேட்டையாடி, மலைவாழ் பெண்களிடம் காதல்புரியும் மலைக்கடவுளாக விளங்கியது. புல்வெளிப் பகுதிகளில் வழிபடப்பட்ட கடவுள் மந்தைகளை மேய்ப்பவராகத் திகழ்ந்தார். அவர் பாலையும் வெண்ணெயையும் அருந்தினார். குழந்தைகளுடனும் கன்றுக்குட்டிகளுடனும் விளையாடினார். குழல் வாசித்து இடைச்சாதிப் பெண்களுடன் பாடி ஆடினார். கடற்கரைப் பகுதியில் வாழ்ந்த மக்கள் கடலில் தங்களுக்கு நிறைந்த அளவு மீன் கிடைக்க உதவும், புயலின் அபாயத்திலிருந்து தங்களைக் காக்கும் தெய்வமாகக் கடற்கடவுளை வணங்கினார்கள். ஆற்றுச் சமவெளியிலிருந்த மக்களுக்குத் தங்கள் கடவுள் இடியைத் தோற்றுவித்து மழை பெய்யச் செய்பவராக இருந்தார். பிற்காலத்தில் இத்தெய்வங்களை மக்கள் முருகன், கிருஷ்ணன், வருணன், இந்திரன் என அழைத்தனர்.

இந்தத் தெய்வங்களைத்தவிர கிராமங்களையும் அவற்றின் எல்லைகளையும் காத்து நிற்கும் சிறிய தெய்வங்களும் இருந்தன. அவர்கள் பொதுவாகப் பெண் தெய்வங்களாகவே விளங்கினர். முன்கூறிய பெரிய கடவுளரை வணங்கிய முறையிலேயே இந்தச் சிறிய பெண் தெய்வங்களையும் மக்கள் வழிபட்டு வந்தனர். மாமிசமும் அரிசியும் மதுவும் அவற்றின்

முன்னே சமர்ப்பிக்கப்பட்டன. தங்களுடைய கஷ்டங்களைப் போக்கி உதவுமாறு மக்கள் இந்தப் பெண் தெய்வங்களை வேண்டிக்கொண்டனர். வீட்டிலோ அல்லது கிராமத்திலோ நோய் பரவியபோது இந்தப் பெண் தெய்வங்களுக்கு மக்கள் படையல்களை அளித்து அவற்றின் முன் நாட்டியம் ஆடினர். அந்த நாட்களில் இசையும் நாட்டியமும் தெய்வ வழிபாட்டின் ஒரு பகுதியாகவே இருந்துவந்தன. நீண்ட காலத்துக்குப் பின்னரே மத சடங்குகளிலிருந்து இசையும் நாட்டியமும் தனித்துப் பிரிந்தன.

## 2. கி. மு. 3000—கி. மு. 1400

சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன்னர் வட இந்தியாவில் கடவுள் வழிபாட்டில் ஒரு புதிய முறை உருவாயிற்று. அந்த முறையில் கடவுளுக்கு அளிக்கப்பட்ட பொருள்கள் நேரடியாக வைக்கப்படுவதில்லை. அதற்கென உண்டாக்கப்பட்ட நெருப்பில் அவை போடப்பட்டன. எரியும் நெருப்பு அக்கினி தேவன் என அழைக்கப்பட்டது. ஏனைய தெய்வங்களின் வாயாக அது நம்பப்பட்டது. படைக்கப்பட்ட பொருள்கள் நெருப்பில் எரிந்துவிட்டபோது அக்கினியின் மூலமாகக் கடவுள் தங்களது படையலைப் புசித்துவிட்டதாக அவர்கள் கருதினார்கள். தெய்வத்தின் உணவாக மாமிசம், சாதம் அல்லது நெய் நெருப்பில் போடப்பட்டபோது அர்ச்சகர் ஒருவர் சில பிரார்த்தனைகளை சம்ஸ்கிருத மொழியில் கூறினார். அக்காலத்திய மக்கள் சம்ஸ்கிருதம் தேவர்களின் மொழி என நம்பினர். இந்தப் பிரார்த்தனைகள் மந்திரங்கள் என அழைக்கப்பட்டன. போர்களில் வெற்றிபெறவும், நீண்ட ஆயுளைப் பெறவும், குழந்தைகள்—செல்வம் ஆகியவற்றைப் பெறவும் தேவர்களை நோக்கி வேண்டிக்கொள்ளும் பிரார்த்தனைகளே இந்த மந்திரங்கள். கண்களுக்குத் தென்படாத

தேவர்களின் வாயாகப் பயன்பட்ட கண்முன் தெரியும் அக்கினி வழிபாட்டுமுறை ஆரியவழிபாட்டு முறை என அழைக்கப்பட்டது. அந்த முறையைப் பின்பற்றியவர்கள் தங்களை ஆரியர்கள் எனக் கூறிக் கொண்டார்கள். இதற்கு மாறாக, அக்கினி இல்லாத பழைய வழிபாட்டு முறைகளைப் பின்பற்றியவர்கள் தஸ்யுக்கள் என அழைக்கப்பட்டனர்.

படிப்படியாக ஆரியர்களின் அக்கினி வழிபாட்டு முறை மக்களிடையே செல்வாக்குப் பெறலாயிற்று. பிறப்பிலிருந்து மரணம்வரை வாழ்க்கையின் ஒவ்வொரு சம்பவத்துடனும் நெருப்பின் முன் செய்யப்படும் சடங்கு ஒன்று இணைக்கப் பட்டது. அவற்றுள் திருமணச்சடங்குகளும் மரணச் சடங்கு களும் மிக விரிவாக இருந்தன. இந்தச் சடங்குகள் வீடுகளி லேயே செய்யப்பட்டன. அவற்றுக்காக ஒரே ஒரு அக்கினி மட்டும் ஏற்றப்பட்டது.

விரைவில் மிகப் பெரிய அளவில் வேறு பல பொதுச் சடங்குகளும் தோன்றின. அவற்றுக்கெனப் பிரத்தியேக மாகக் கட்டப்பட்டிருந்த யக்ஞசாலைகளில் அவை நிகழ்த்தப் பட்டன. இந்தப் பொதுச்சடங்குகளை செய்து முடிக்கப் பல புரோகிதர்கள் தேவைப்பட்டனர். அவை பல நாட்கள் தொடர்ந்து நடந்தன. அவற்றுக்கான செலவை ஏற்கக் கூடிய செல்வந்தர்களின் நன்மைகளுக்காக இச்சடங்குகள் நிகழ்த்தப்பட்டன. பெரும்பாலும் அரசர்களுக்காகவே அவை நடைபெற்றன. அரசன் முடிசூடிக்கொண்ட போதும், போருக்குக் கிளம்பியபோதும், தன்னை அரசர்க்கரசனுகப் பிரகடனப்படுத்திக் கொண்டபோதும் மிக விரிவாக இவற்றைச் செய்வித்தான். இந்தப் பொதுச் சடங்குகளில் மூன்று அக்கினிகள் ஏற்றப்பட்டன.

இவ்வாறு பலவகையான சடங்குகள் பல்கிப் பெருகிய போது அவற்றுக்கான பல்வேறு மந்திரங்களும் இயற்றப் பட்டன. இத்தகைய மந்திரங்கள் அநேகமாகக் கவிதை களாகவே இருந்தன. ஒரு சில வசனமாகவும் இருந்தன.

இந்த மந்திரங்களை இயற்றியவர்கள் ரிஷிகள் என அழைக்கப் பட்டனர். நாளடைவில் மந்திரங்கள் எண்ணிக்கையில் மிகுந்தன. மதச்சடங்குகள் விரிவடைந்து கடினமாயின. எனவே மந்திரங்களை மனனம் செய்வதிலும் சடங்குகளுக் கான பல்வேறு வழிமுறைகளைத் தெரிந்துகொள்வதிலும் தங்களுடைய நேரத்தை முழுமையாகச் செலவழிக்கக்கூடிய ஒரு தனி வகுப்பினரின் தேவை மிகுந்தது. அவற்றைச் செய்தவர்கள் ஒரு பிரத்தியேக ஜாதியாக பிராமணர்கள் என அழைக்கப்பட்டனர். மதச்சடங்குகளை நிகழ்த்துவதில் அவர்களுக்கிருந்த தனித்த திறமைக்காகவும் அவர்களது மந்திர ஞானத்துக்காகவும் பிராமணர்கள் வெகுவாக மதிக்கப்பட்டனர்.

மன்னர்களும் இளவரசர்களும் அவர்களது உறவினர் களும் ஆட்சி நடத்தினர். மக்கள் நலனைக் கருத்தில் கொண்டு அவர்களைப் பாதுகாத்து வந்தனர். தஸ்யுக்களு டன் போரிட்டு யாகங்களைக் காப்பாற்றினர். மேலும் பல யாகங்களை நடத்தப் பொருள் உதவியும் செய்தனர். அவர் கள் ஒரு தனி ஜாதியாகப் பிரிந்து க்ஷத்திரியர் என அழைக்கப் பட்டனர்.

மக்களில் பெரும் பகுதியினர் உழவுத் தொழிலில் ஈடுபட் டும், ஆடுமாடுகளை வளர்த்தும், வியாபாரத்தில் ஈடுபட்டும், மற்றும் தச்சர்—பொற்கொல்லர் போன்ற பல தொழில்களை யும் செய்து வந்தனர். அவர்கள் வைசியர் என அழைக்கப் பட்டனர்.

குற்றேவல் புரிந்த இதர மக்கள் சூத்திரர் எனக் கூறப் பட்டனர்.

இந்த நான்கு ஜாதியினரும் அக்கினியின் மூலமாக தெய் வங்களை வழிபடும் ஆரியர்களாக இருந்தனர். தஸ்யுக்களோ நெருப்பற்ற பழைய வழிபாட்டு முறைகளையே பின்பற்றி வந்தனர். அவர்கள் ஆரிய முறையை வெறுத்தனர். எனவே ஆரிய அரசர்களும் தஸ்யுக்களின் தலைவர்களும் அடிக்கடி

போரிட்டு வந்தனர். ஆரியர்களைப் போலவே தஸ்யுக்களும் மிகவும் நாகரிகம் அடைந்தவர்களாக விளங்கினர். இருவருமே நிலத்தை உழுது பயிரிட்டனர். துணிகளை நெய்தனர். வியாபாரத்தில் ஈடுபட்டனர். அவர்களுடைய மன்னர்கள் பெரும் மாளிகைகளில் வசித்தனர். செல்வந்தர்கள் உயர்ந்த ஆடைகளையும் விலைமதிப்பற்ற கற்கள் பதித்த தங்க ஆபரணங்களையும் அணிந்தனர்.

ரிஷிகள் மந்திரங்களை இயற்றிய காலம் வேத காலம் என அழைக்கப்பட்டது. மந்திரங்கள் முறையாகத் தொகுக்கப்பட்டு வேதங்கள் என்ற பெயரில் நான்கு வெவ்வேறு புத்தகங்களாக அமைக்கப்பட்டன. அவற்றைத் தொகுத்தவர், வேதங்களை சேகரிப்பவர் என்று பொருள் படக்கூடிய வேத வியாசர் என்ற பெயரால் அழைக்கப்பட்டார். முதல் மூன்று புத்தகங்கள் பிரத்தியேக புரோகிதர்களால் யாகங்கள் செய்யும் போது பயன்படக் கூடிய மந்திரங்களைக் கொண்டிருந்தன. வீடுகளில் செய்யப்படும் சடங்குகளில் பயன்படும் மந்திரங்கள் நான்காவது புத்தகத்தில் சேகரிக்கப்பட்டன.

வேத வியாசரின் காலத்துக்குப் பின்னர் புதிய மந்திரங்கள் எதுவும் இயற்றப் படவில்லை. வேத மந்திரங்களை இயற்றிய பழங்கால ரிஷிகள் அவர்களுடைய சொந்தப் பெயரால் இன்றி அவர்களுடைய குடும்பப் பெயராலேயே பிற்காலத்தில் அழைக்கப்பட்டனர். அவர்களுள் மிகச் சிறந்த ரிஷிக் குடும்பங்களாக விளங்கியவை வசிஷ்டர், விஸ்வாமித்திரர், ஆங்கிரஸ், பார்க்கவர் ஆகியவர்களுடையவை யாகும்.

மதச் சடங்குகளில் அக்கினி புகுத்தப் பட்டதன் காரணமாக மக்களுடைய பழக்க வழக்கங்களில் ஒரு பெரிய மாறுதல் தோன்றியது. அதற்கு முன்னர், இறந்தவர்கள் புதைக்கப்பட்டனர். அல்லது அவர்களது உடல் பறவைகளாலும் மிருகங்களாலும் உண்ணப்படும்படியாக காடுகளிலோ அல்லது மலைகளின் உச்சியிலோ விடப்பட்டுவந்தன. இறந்தவர்களைத் தெய்வங்களுக்கு அக்கினியின் மூலம் ஒரு படையலாக

அளிக்கும் வழக்கம் ஆரியர்களாலேயே கண்டு பிடிக்கப்பட்டது. இவ்வாறு இந்துக்களிடையே இறந்தவர்களை எரிக்கும் வழக்கம் எழுந்தது.

வேத காலத்தில் வடஇந்தியாவில் மிகச்சிறந்த அரசாட்சிகள் இருந்தன. அந்த நாட்களில் ஆட்சி புரிந்த மன்னர்கள் இரண்டு வம்சங்களைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். அந்த இரு வம்சங்களும் சூரியனிலிருந்தும் சந்திரனிலிருந்தும் தோன்றியதாகக் கருதப்பட்டன. எனவே அவற்றைச் சேர்ந்தவர்கள் சூரிய வம்சத்தினர் என்றும் சந்திர வம்சத்தினர் என்றும் அழைக்கப்பட்டனர். இந்த இரு வம்சங்களையும் சேர்ந்த அரசர்களின் வம்சாவளியைப் பற்றிய விவரங்கள் புராணங்களிலும் இதிகாசங்களிலும் காணப்படுகின்றன. புராணங்கள் பதினெட்டு. அவை பழங்கால சரித்திரம் மட்டும் இன்றி வேறு பல முக்கிய விவரங்களையும் அளிக்கின்றன. இதிகாசங்கள்இரண்டு—ராமாயணமும் மகாபாரதமும். இந்த நூல்களில் அக்காலத்திய மிகச் சிறந்த மன்னர்களின் வரலாறுகள் அடங்கியுள்ளன.

சூரிய வம்சம் இக்ஷ்வாகுவால் அயோத்தியில் தோற்றுவிக்கப்பட்டது. பழங்கால இந்தியாவில் மிக அதிகக் காலம் இந்த வம்சத்தினர் ஆட்சி புரிந்தனர். அவர்களது ஆட்சி தொடர்ந்த ஒன்ருக சுமார் நூறு தலைமுறைகளுக்கு நீடித்தது. அதாவது ஏறக் குறைய 2500 ஆண்டுகள். பிரதிஷ்தானவில் புரூரவஸ் என்ற அரசனல் சந்திரவம்சம் தோற்றுவிக்கப் பட்டது. முன்கூறிய மூன்று அக்கினிகள் கொண்ட யாகங்களை முதன் முதலாகச் செய்தவனும் அவனே. இந்த இரண்டு வம்சங்களிலிருந்தும் பல்வேறு கிளைகள் தோன்றின. இந்தக் கிளைகளைச் சேர்ந்த பல்வேறு அரசர்கள் காந்தாரத்திலிருந்து வைதம்பா வரை பரவியிருந்த பல நாடுகளில் ஆட்சி புரிந்தனர்.

இக்ஷ்வாகு வம்சத்தில் இருபதாவதாகத் தோன்றிய மாந்தாதா மிகவும் புகழ் வாய்ந்த அரசனுகத் திகழ்ந்தார். ஏனைய மன்னர்களைவிட வலுமிகுந்தவனுக விளங்கி, அரசர்க்

கரசனுக—பாரதம் முழுதும் ஏற்றுக் கொண்ட முதல் சக்கர வர்த்தியாக—அவன் விளங்கினுன். அவன் காலத்தில் யாகங் கள் பெருகின. அவனே பல சிறந்த யாகங்களை முன்நின்று நடத்தினுன். அதுமட்டுமின்றி அவன் சிறந்த ரிஷியாகவும் இருந்தான். அவன் இயற்றிய மந்திரங்கள் வேதங்களில் இணைக்கப்பட்டன. அவனிலிருந்து நாமுவது தலைமுறையை சேர்ந்தவன் திரிசங்கு. திரிசங்குவின் காலத்தில்தான் விஸ்வாமித்திரர் வாழ்ந்தார். பிறவியில் க்ஷத்திரியரான விஸ்வாமித்திரர் தம்முடைய தவங்களின் சிறப்பால் பிராம ணர் ஆனவர். புனித மந்திரமாகிய காயத்திரியை இயற்றி யவரும் அவரே. திரிசங்குவிற்குப் பின் அரசனுனவன் ஹரிச் சந்திரன். உண்மை தவிர வேறு எதுவும் பேசி அறியாத ஹரிச்சந்திரனின் கதை அனைவரும் அறிந்த ஒன்று.

சந்திர வம்சத்திலிருந்து அநேகக் கிளைகள் எழுந்து இந்தியா பூராவும் பரவின. அவற்றுள் மிகவும் புகழ் வாய்ந்த தாக விளங்கியது புரு அல்லது பௌரவ வம்சாவளியாகும். அதன் தலை நகரம் ஹஸ்தினுபுரம். மிகச் சிறந்த, புகழ் வாய்ந்த சக்கரவர்த்தியாகத் திகழ்ந்த பரதன் (சகுந்தலையின் புத்திரன்) இந்த வம்சாவளியில் வந்தவன். அவன் மிகவும் பக்திமானுன மன்னனுக இருந்தான். மாந்தாதாவைப் போன்று அநேக யாகங்களையும் செய்தான். இந்தச் சிறந்த அரசன் சக்கரவர்த்தியாக முடி சூடிய போது இந்தியா பாரத வர்ஷம் என்று பெயர் பெற்றது.

சூரிய வம்சத்தின் மிகச் சிறந்த சக்கரவர்த்தியாகத் திகழ்ந்தவன் ராமன். சூரிய வழிபாட்டு முறைகளுக்கு எதிரி களாக விளங்கிய, தென் இந்தியாவைச் சேர்ந்த தஸ்யுக்கள் (இவர்கள் பொதுவாக ராட்சதர்கள் என அழைக்கப்பட்ட னர்) ரிஷிகள் செய்த வேத யாகங்களை அழித்துக் கொடுமை செய்தனர். ராமன் இளைஞனுக இருந்தபோதே அவர் களைப் போரில் வென்முன். பின்னர் இலங்கையின் மன்னனுன ராவணனுடன் போரிட்டு யுத்த பூமியில் அவனைக் கொன்முன். அதன் விளைவாக ஆரிய வழிபாட்டு முறை

கள் தென் பிராந்தியத்தில் எந்த விதத் தடங்கலு மின்றிப் பரவலாயிற்று. அயோத்தியின் சக்கரவர்த்தியாக முடி சூடிய ராமன் நீண்ட காலம் மனிதப் பண்புகள் நிறைந்த வனுக, நீதி தவருத முறையில் ஆட்சி புரிந்தான். அவனது கல்யாண குணங்களுக்காகப் பின்னர் மக்கள் அவனைக் கடவுளின் அவதாரம் என ஏற்று வழிபடத்தொடங்கினுர்கள்.

ராமனின் காலத்துக்குப்பின் வட இந்தியா சிறு சிறு ராஜயங்களாக உடைந்து சிதறியது. ஒவ்வொரு மன்னனும் தானே மற்றவர்களைவிடச் சிறந்தவன் என கர்வம் கொண்ட வனுக இருந்தான். இதனுல் சிறு சிறு சண்டைகளாகத் தொடங்கிப் பின்னர் ஒரு சில நூற்ருண்டுகளில் பாரதப் பெரும் போராக உருப் பெற்றது.

பாரதப் பெரும் போரின் உடனடியான காரணம் குரு க்ஷேத்திரத்தின் ஆட்சி பீடத்துக்கு வாரிசு யார் என்பது குறித்து எழுந்த வழக்கு ஆகும். ஒரு பக்கம் பாண்டுவின் புத்திரர்களான பாண்டவர்கள். மறு பக்கம் பாண்டுவின் சகோதரன் திருதராஷ்டிரனின் புதல்வர்களான கௌரவர் கள். இந்தப் போரில் தமிழ் மன்னர்களான சோழ, சேர, பாண்டியர்கள் உள்பட இந்திய மன்னர்கள் அனைவரும் பங்கேற்றனர். பதினெட்டு நாட்கள் நிகழ்ந்த போரின் முடிவில் பாண்டவர்கள் வெற்றி பெற்றனர். யுதிஷ்டிரன் சக்ரவர்த்தியாக முடி சூடினுன். ஆனுல் விரைவில் பதவி யிலிந்து விலகி, தன் சகோதரன் பேரனுன பரிக்ஷித்துவிடம் ஆட்சியை ஒப்படைத்து விட்டான்.

பாரதப் போரில் பாண்டவர்களுக்குப் பேருதவிகள் செய்தவன் துவாரகையின் மன்னனுன கிருஷ்ணன். அந்தக் காலத்தின் மிகச் சிறந்த அறிவாளியாகத் திகழ்ந்தவன் அவன். பிற்காலத்தில் அவனையும் கடவுளின் மற்ருெரு அவதாரமாகக் கருதி மக்கள் வழி படத் தொடங்கினுர்கள்.

பாரதப் பெரும் போரின் விளைவாகப் பெரும்பாலான அரச பரம்பரைகள் நசிந்தன. தப்பிப் பிழைத்த ஒரு சில

க்ஷத்திரியர்களும் பெரும் யாகங்களை நடத்தும் அளவிற்குச் செல்வம் பெற்றிருக்கவில்லை. நாளடைவில் யாகங்களின் முக்கியத்வம் குறையத் தொடங்கி, அக்கினி யற்ற பழைய வழிபாட்டு முறைகள் மக்களிடையே மீண்டும் செல்வாக்குப் பெறத் தொடங்கின. மந்திரங்களை இயற்றும் ரிஷிகளும் அதன் பின்னர் தோன்றவில்லை. வேத காலம் முடிவு பெற்றது.

வேத காலத்தில் அரசர்கள் முறையான ஆட்சி நடத்துவதில் ரிஷிகள், பிராமணர்கள் ஆகியோரது உதவியைப் பெற்றனர். சபா அல்லது சமிதி என அழைக்கப்பட்ட குழுக்கள் அந்தந்தப் பகுதிகளின் நேரடி நிர்வாகத்தை நடத்தி வந்தன. பரிஷத் என அழைக்கப்பட்ட அறிவாளிகளின் குழுக்கள் சட்டங்களை இயற்றின.

வேத காலம் எப்போது தொடங்கி எப்போது முடிவு பெற்றது என்பதை நிர்ணயித்துக் கூறுவது கடினம். பொதுவாக கி. மு. 3000-ல் தொடங்கி கி. மு. 1400-ல் முடிவு பெற்றது எனக் கொள்ளலாம்.

# 3. கி. மு. 1400 - கி. மு. 323

ஒரு புதிய ரிஷிவர்க்கம் தோன்றியது. அவர்கள் 'பிற்கால ரிஷிகள்' என அழைக்கப்பட்டனர். அவர்கள் புதிய மந்திரங்கள் எதையும் இயற்றவில்லை. ஆனால் ஏற்கனவே இயற்றப்பட்டிருந்த மந்திரங்களுக்கு அவர்கள் உரை எழுதினார்கள். தெய்வங்களைத் தியானிப்பதற்குரிய பல் வேறு வழிகளைக் குறிப்பிடும் நூல்களை எழுதினார்கள். அவை உபநிஷதங்கள் என அழைக்கப்பட்டன. அது மட்டுமின்றி புதிய முறையில் ஸூத்ரங்களையும் இயற்றினார்கள். ஸூத்ரங்கள் பொருள் செறிந்த சிறிய வாக்கியங்களின் வேதச்

சடங்குகள் செய்யும் முறைகளைப் பற்றியும், நெறி, வீட்டுச் சடங்குகள், கணிதம், வானசாஸ்திரம், இலக்கணம், நிர்வாகம், மற்றும் இதர கலைகளைப்பற்றியும் விளக்கின. தத்துவப் பேராசிரியராக விளங்கிய யக்ஞ வல்க்யரும் இலக்கணம் வகுத்த பாணிணியும் இந்தக்காலத்தின் மிகச் சிறந்த அறிஞர்களாகத் திகழ்ந்தனர்.

வேதகாலத்தில் புகழ்பெற்று விளங்கிய அநேக வட இந்திய ராஜ்யங்கள் அடியோடு அழிந்தன. பல புதிய அரசாட்சிகள் தோன்றி முக்யத்வம் பெற்றன. கங்கை நதி பொங்கியெழுந்து ஹஸ்தினபுர நகரத்தை அழித்தது. கௌசாம்பியில் குருபாஞ்சால ராஜ்யம் என்ற புதிய அரசு தோன்றியது. ஆனால் அதுவும் ஒரு சில நூற்றாண்டுகளுக்குள் க்ஷீணித்தது. கோசல, காசி, விதேக, மகத, சூரசேன, அவந்தி ராஜ்யங்கள் சிற்றரசுகள் ஆயின. அவற்றின் மன்னர்கள் வலுக்குன்றியவர்களாகவே இருந்தனர். அவர்களில் யாரும் சக்கரவர்த்தி என்னும் உன்னதப் பட்டத்தை அடையவில்லை. ஒரு சில ராஜ்யங்கள் கூட்டாட்சி முறையில் இயங்கி வந்தன. மன்னருக்குப்பதில் வலிமை மிக்கப் பிரபுக்களின் குழு நிர்வாகப் பொறுப்பை ஏற்றிருந்தது. வேறு சில குடியரசுகளாகவும் விளங்கின. அவை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட குழுக்களால் நிர்வகிக்கப்பட்டன. ஒரு தனி நகரம் குடியரசு ஆட்சி முறையைக் கொண்டிருந்த போது பௌர என்னும் பல நகரங்கள் ஒரு மாவட்டமாக அமைந்து இத்தகைய நிர்வாக முறையை ஏற்றபோது ஜனபாத என்றும் அழைக்கப்பட்டன.

தென் இந்தியாவில் அப்போது மூன்று பெரும் அரசாட்சிகள் இருந்தன. கீழ்க்காவேரி சமவெளி (இப்போதைய திருச்சி, தஞ்சை மாவட்டங்கள்) சோழ மன்னர்களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. இன்று திருச்சியின் ஒரு பகுதியாகிவிட்ட உறையூர் அன்று சோழ மன்னர்களின் தலைநகரமாக விளங்கியது. காவேரி சமவெளி வளம் நிறைந்து இருந்தது. அங்கிருந்து அரிசியும் பருத்தி ஆடைகளும்

ஏற்றுமதி செய்யப்பட்டன. வைகை, தாமிரவருணி ஆற்றுச் சமவெளிப் பகுதிகள் பாண்டிய வம்ச மன்னர்களால் ஆளப்பட்டது. பாண்டிய நாட்டுக் கடற்கரைகளில் முத்துக்கள் கிடைத்தன. அவை பல்வேறு நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. கடற்கரைப்பகுதியில் இருந்த மதுரை, பாண்டிய மன்னர்களின் தலைநகரமாக இருந்தது. ஆனால் மதுரையைக் கடல் கொண்டுவிடவே பின்னர் கபாடபுரம் அவர்களது தலைநகராயிற்று. மேற்கேயிருந்த மலைப்பிராந்திய பிரதேசங்கள் சேரர்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. தென் இந்தியாவின் மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் சேரநாட்டின் அநேக துறைமுகங்கள் இருந்தன. அவற்றிலிருந்து பல இடங்களுக்கு மிளகு ஏற்றுமதி செய்யப் பட்டது. இந்தப் பழம்பெரும் தமிழ் மன்னர்கள் தமிழ்க் கவிஞர்களுக்குப் பேராதரவு அளித்துவந்தனர். கவிஞர் களும் ஒவ்வொரு நகரத்துக்கும் சென்று அந்தந்த மன்னர் களையும் பிரபுக்களையும் போற்றிப் புகழ்ந்து கவிபாடிப் பல பரிசுகளைப் பெற்றனர்கள்.

வேத காலத்திலேயே வெளிநாடுகளுடன் விரிவான வியாபாரத் தொடர்புகள் இருந்தன. அதற்குப் பிற்பட்ட காலத்தில் அவை மேலும் பல்கிப் பெருகின. இந்தியப் பொருள்கள், பருத்தி ஆடைகள், இரும்பு சாமான்கள், சந்தன மரம், இதர மரவகைகள், மிளகு ஆகியவை எகிப்து, சோமாலிலாந்து, பாலஸ்தீனம், பாபிலோனியா ஆகிய தூர தேசங்களுக்கும்கூட எடுத்துச் செல்லப்பட்டன. இந்தியப் பவழம், சாம்பிராணி, கற்பூரம் ஆகியவை சீனாவுக்கு அனுப் பப்பட்டன. அவற்றுக்குப் பதிலாக, பண்டமாற்று முறை யில், சீனாவிலிருந்து பட்டும் சர்க்கரையும் வந்தன.

மக்களின் வாழ்க்கை பெரும் மாறுதலுக்கு உட்பட்டது. வேதகாலத்து யாக முறைகளுக்குப் பதிலாக அக்கினியற்ற வழிபாட்டு முறைகளே கடைப்பிடிக்கப்பட்டன. யாகங்கள் செய்யும்போது ஒருவருக்குப் பின் ஒருவராகப் பல தெய்வங் களுக்கு நெருப்பின் மூலம் படையல்கள் அளிக்கப்பட்டன.

ஆனால் இப்போதோ ஒரே ஒரு தெய்வத்தையே மக்கள் வழிபடத் தொடங்கினார்கள். புனித அக்கினியின் உதவியின்றி விஷ்ணு அல்லது சிவனுக்கு மாமிசம் அல்லது அரிசி, பழங்கள், புஷ்பங்கள் ஆகியவை அளிக்கப்பட்டன. இத்தெய்வங்களின் உருவங்கள் அல்லது அவர்களின் சின்னங்கள் உலோகத்தாலும் கற்களினாலும் அமைக்கப்பட்டன. மரத்தைக் கொண்டு நிர்மாணிக்கப்பட்ட சிறிய கோயில்களில் சாலக்கிராமம் அல்லது லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு மக்களின் வழிபாட்டுக்கு உரியதாயிற்று.

வேதகாலத்துக்கு முன்னரும் இத்தகைய வழிபாட்டு முறை இருந்து வந்தது. பாரதப்பெரும் போருக்குப் பின்னர் அக்கினி வழிபாட்டு முறை க்ஷீணித்து இந்தப் பழைய முறையே எங்கும் பரவி மக்களிடையே செல்வாக்குப் பெற்றது. இவ்வகையான வழிபாட்டுமுறையில் பிராமணப் புரோகிதர்கள் மந்திரங்களைச் சொல்ல வேண்டியது அவசியமற்ற ஒன்றாகிவிட்டது. எல்லா ஜாதியினரும், சகர்யவனர் போன்ற வேற்று நாட்டவரும் இந்த உருவ வழிபாட்டில் ஈடுபாடுகொள்ள முடிந்தது. விஷ்ணுவை வணங்கியவர்கள் பாகவதர்கள் எனவும் சிவ வழிபாட்டில் ஈடுபட்டிருந்தவர்கள் பாசுபதர்கள் எனவும் அழைக்கப்பட்டனர்.

இதனிடையில், பிராமணர்கள் மத்தியில், நீண்டகாலம் அக்கினி வளர்த்து மதச்சடங்குகளைச் செய்து முடித்த பின்னர், உலக பந்தங்களிலிருந்து விடுபடும் வழக்கம் பரவியிருந்தது. அவர்கள் உலக வாழ்க்கையிலிருந்து விடுபட்ட போது சன்னியாசிகள் என அழைக்கப்பட்டனர். இந்தச் சன்னியாசிகள் எல்லா இன்பங்களையும் துறந்து, காடுகளிலே வசித்து தவங்களைச் செய்தனர். சன்னியாசிகள் மட்டுமே பிறப்பு—இறப்பு என்ற சக்கரத்திலிருந்து விடுபட முடியும் என்ற நம்பிக்கை மக்களிடையே பரவியிருந்தது. வேதங்கள் நிர்ணயித்திருந்த சட்டதிட்டங்களின்படி பிராமணர்கள் மட்டுமே சன்னியாசிகள் ஆகக்கூடிய தகுதிகளைப் பெற்றிருந்தனர். பாகவதர்களும் பாசுபதர்களும்கூட சன்னியாசத்தை

மேற்கொண்டனர். அப்போது அவர்கள் ஏகாந்திகள் எனவும் மகேஸ்வரர்கள் எனவும் அழைக்கப்பட்டனர். க்ஷத்திரியர்களும் சன்னியாச முறைகளை ஏற்படுத்தினர். அவர்களுடைய ஆச்சாரியார்கள் ஜைனர்கள் எனவும் புத்தர்கள் எனவும் அழைக்கப்பட்டனர்.

இந்த சன்னியாசிகளும் மற்றும் குடும்ப வாழ்வில் ஈடுபட்டிருந்த அறிஞர்களும் நாட்டில் கல்வியைப் பரப்பினார்கள். இவர்கள் ஒவ்வொருவரும் பலரை மாணவர்களாக ஏற்றுக்கொண்டு தங்களுக்குத் தெரிந்த துறைகளை அவர்களுக்குப் போதித்தனர். பெரும்பான்மையான ஆசிரியர்கள் பிராமணர்களாகவே இருந்தனர். அவர்கள் தங்கள் மாணவர்களிடமிருந்து சம்பளமாக எதையும் பெற்றுக்கொள்ளவில்லை. ஆனால் அரசர்களும் செல்வந்தரான மாணவரும் அவர்களுக்குத் தங்களது அன்பளிப்பாகப் பல பரிசுகளை வழங்கினர். அவர்கள் வழங்கிய கல்வி பொதுவாக பன்னிரண்டிலிருந்து முப்பத்தாறு ஆண்டுகள் வரை நீடித்தது.

இத்தகைய சன்னியாசிகளுள் அநேகர் தென் இந்தியாவுக்குக் குடிபெயர்ந்து வந்தனர். அவர்களுள் அகஸ்திய குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் பொதிகை மலையைத் தமது வாசஸ்தலமாகக் கொண்டார். தமிழ் மொழியையும் தொன்மையான தமிழ்க்கவிதைகளையும் கற்றுத் தேர்ந்து தமிழ் இலக்கணமும் கவிதை புனைவதற்கான வழிமுறைகளையும் கொண்ட நூலை இயற்றினார். அகஸ்தியரின் நூலும், அவருக்கு முந்திய காலத்திய கவிதை இலக்கியமும் அழிந்துவிட்டன. ஆனால் அகஸ்தியரின் பெயர் அமரத்வம் பெற்று நிலைத்துவிட்டது.

கி. மு. 600-ல் வட இந்தியாவில் மகதம் அதி முக்கியம் வாய்ந்த ஒன்றாக நிலைபெற்றது. சாகேத நகரத்தைத் தலைநகராகக்கொண்ட கோசலமும், கௌசாம்பியைத் தலைநகராகக் கொண்ட வத்ஸ ராஜ்யமும், உஜ்ஜெயினியைத் தலைநகராகக்கொண்ட அவந்தியும், தட்சசீலத்தைத் தலைநக

ராகக்கொண்ட காந்தாரமும் மகதத்துடன் போட்டியிட்டு நின்றன.

கி. மு. ஆரும் நூற்றுண்டில் மகதத்தின் புகழ்பெற்ற மன்னர்களாக பிம்பிசாரன், தர்சகன், அஜாதசத்ரு ஆகியவர்கள் விளங்கினுர்கள். கௌசாம்பியை உதயணன் ஆண்டு வந்தான். தர்சகனின் சகோதரி பத்மாவதியை அவன் திருமணம் செய்துகொண்டான். அவந்தி மன்னனின் சகோதரியான வாசவதத்தையையும் அவன் மணந்தான்.

இந்த அரசாட்சிகளுள் மகதமே பலம் பொருந்தி விளங்கியது. அதன் மன்னர்கள் படிப்படியாக வட இந்தியாவின் இதர ஆட்சிகள் அனைத்தையும் கைப்பற்றினுர்கள். மகதத்தின் சக்தி பல்கிப் பெருகியபோது அதன் தலைநகர் முதலில் ராஜகிரகத்துக்கும் பின்னர் பாடலிபுத்திரத்துக்கும் மாற்றப்பட்டது. இந்தியாவில் முதன் முறையாகக் கற்களைக் கொண்டு மாளிகை ஒன்று கட்டப்பட்டது ராஜகிரகத்தில் தான். மகதமன்னனின் அரண்மனையே அது.

சுமார் கி.மு. 420-ல் மகாபத்மநந்தன் மகதத்தின் சிம்மாதனத்தைக் கைப்பற்றினுன். அவன் தன்னை இந்தியாவின் சக்கரவர்த்தி யென்றும் பிரகடனப்படுத்திக் கொண்டான். கலிங்கம் உள்பட வட இந்தியா முழுவதும் அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. அவனுடைய புத்திரர்களின் ஆட்சி கொடுமை நிறைந்து விளங்கியது. கி.மு. 325-ல் சாணக்யனின் உதவியுடன் சந்திரகுப்தமௌரியன் அவர்களிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றினுன்.

அப்போது தர்யாவுஷ், பெர்ஷியாவின் சக்கரவர்த்தியாக இருந்தான். சிறந்த போர் வீரனுன அவன் ஐரோப்பாவின் மீது படையெடுத்ததோடு காந்தாரத்தையும் சிந்து சமவெளியையும் கைப்பற்றினுன். அவனுடைய காலத்தின் முடிவில், உலகத்தின் தலைசிறந்த வீரர்களுள் ஒருவனுன அலெக்சாந்தர் பெர்ஷியாவைக் கைப்பற்றியதோடு, இந்தியாவையும் தனது ஆட்சிக்குள் கொண்டுவர விரும்பினுன். மூன்றுண்டுகள்

இந்தியாவின் வடமேற்கில் இருந்த பிரதேசங்களை வெல்வதிலும், அங்கு புதிய நகரங்களை நிர்மாணிப்பதிலும் அவன் காலம் கழிந்தது. பின்னர் இந்தியாவிற்குள் நுழைந்து பஞ்சாப் வரை அவனது படைகள் முன்னேறின. ஆனால் மகதத்தின் வலிமையைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த கிரேக்க வீரர்கள் அதற்குமேல் முன்னேற மறுத்தனர். எனவே அலெக்சாந்தர் தன்னுடைய திட்டத்தைக் கைவிட்டு பாபிலோனுக்குத் திரும்ப வேண்டியதாயிற்று. அவன் கி.மு. 323-ல் மரணமடைந்தான்.

பிம்பிசாரன், அஜாதசத்ரு ஆகியவர்களின் ஆட்சிக் காலத்தில் அந்த நூற்றுண்டின் மிகச் சிறந்த சம்பவங்கள் நிகழ்ந்தன. இரண்டு பெரும் க்ஷத்திரிய இளவரசர்கள் உலக வாழ்வைத் துறந்து, துறவிகள் ஆயினர். அவர்களுள் ஒருவர் வைசாலியின் இளவரசரான மகா வீர வர்த்தமானர். இரண்டு நூற்றுண்டுகளுக்கு முன்னர் பார்ஸ்வநாதரால் தோற்றுவிக்கப்பட்ட ஜைனர்களின் துறவு மார்க்கத்தில் அவர் சேர்ந்தார். அந்த மார்க்கத்தை சீர்திருத்தி பிராமண சன்னியாசிகளுக்கு விதிக்கப்பட்டிருந்த சட்ட திட்டங்களை தம்முடைய துறவு மார்க்கத்தின் வழி முறைகளாக ஆக்கினர். அவற்றை மேலும் கடுமையானதாக மாற்றித் தம்மைப் பின்பற்றுபவர்களிடையே அறிமுகப்படுத்தினர். பிராமண சன்னியாசிகள் மாமிசம் உண்பதைக் கைவிட்டனர். ஆனால் ஜைனத் துறவிகளோ எல்லா வகையான ஜீவஹிம்சையையும் கைவிட வேண்டியதாயிற்று. எறும்பின் மீது மிதித்து அதை கொன்று விடாதபடி நடக்கும் போதுகூட அவர்கள் அதி ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டியதாயிற்று. அவர்கள் எல்லா வகையான வேதனைகளையும் பொறுத்துக்கொள்ள வேண்டி இருந்தது. அவர்களில் சிலர் கடுமையான வெயிலிலும் மழையிலும் ஆடைகள் ஏதும் இன்றி நிர்வாணமாக அலைந்து திரிந்தனர். அவர்கள் திகம்பரர்கள் என அழைக்கப்பட்டனர். வேறு வகையான ஜைனத் துறவிகள் சிறிதளவே ஆடை அணிந்திருந்தனர். அவர்கள் ஸ்வேதம்பரர்கள்

(வெண்மையான ஆடை தரித்தவர்கள்) என அழைக்கப்பட்டனர். குடும்ப வாழ்வில் ஈடுபட்டிருந்தவர்களும் கூட துறவு மேற்கொள்ளாமலேயே அவர்களுடைய ஒரு சில வழி முறைகளைக் கடைப்பிடித்தனர். அவர்கள் ஸ்வாவகர்கள் என அழைக்கப்பட்டனர்.

சூரிய வம்சத்தில், இக்ஷ்வாகுவின் பரம்பரையில் வந்த கோசலத்தின் இளவரசன் கௌதம புத்தரும் அரசைத் துறந்து துறவியானார். அவர் ஏற்படுத்திய துறவு வழி பௌத்தம் என அழைக்கப்பட்டது. பிராமண சன்னியாசிகள் அனுஷ்டித்தவற்றைக் காட்டிலும் புத்தர் தம் சீடர்களுக்கு வகுத்தளித்த வழிமுறைகள் மிக எளிதாக இருந்தன. பிராமண சன்னியாசிகளும் ஜைனத் துறவிகளும் கடைப்பிடித்த கடுமையான தவ முறைகளைப் பௌத்தர்கள் பின்பற்றவில்லை. கடுமையான தவ வாழ்விற்கும் கட்டுப்பாடற்ற உலக வாழ்க்கைக்கும் இடையே ஒரு 'நடுவழி'யை கௌதமர் போதித்தார். வைசியர்களும் சூத்திரரும் பௌத்தத்தைத் தழுவுவதற்கு எந்தவிதமான தடையும் இருக்கவில்லை. பெண்களும் கூட பிட்சுணிகளாக அனுமதிக்கப் பட்டனர். இக்காரணங்களினால் ஏனைய மார்க்கங்களைக் காட்டிலும் பௌத்தம் மக்களிடையே மிகுந்த செல்வாக்குப் பெற்றது.

யோகம் என்று அழைக்கப்பட்ட பிரார்த்தனை முறைகளை இந்த எல்லா மார்க்கங்களையும் சேர்ந்த துறவிகள் அனைவருமே கடைப்பிடிக்க வேண்டியிருந்தது. பிராமண சன்னியாசிகளும் ஜைனத் துறவிகளும் கடுமையான யோக முறைகளை அனுஷ்டித்தார்கள். பௌத்தர்கள் எளிதானவற்றையே கடைப்பிடித்தனர், காரணம், ஆசைகளை வெல்வதையே முக்கியமாகக் குறிப்பிட்டு கௌதமர் போதித்தார். இந்தத் துறவிகள் அனைவரும் அலைந்து திரியும் வாழ்க்கையையே மேற்கொண்டனர். ஆனால் மழைக்காலத்தில் நான்கு மாதங்கள் ஒரே இடத்தில் தங்கி சில மதச்சடங்குகளை செய்து முடிப்பதற்கு அவர்கள் அனுமதிக்கப்பட்டிருந்தனர். இத் துறவிகள்

இவ்வாறு தங்க உதவும் வகையில் பெரும் கட்டிடங்க கொடை வள்ளல்கள் பலர் கட்டுவித்தனர். குறிப்பாக பௌத்தர்களுக்கான கட்டிடங்களே மிக அதிக அளவில் கட்டப்பட்டன. அவை சங்கிராமம் என அழைக்கப்பட்டன. அவற்றுக்கு அடுத்த படியாக தியானத்துக்குப் பயன்படும் சைத்தியங்களும் எழுப்பப்பட்டன. பக்திமான்கள் ஸ்தூபங்களைக் கட்டினுர்கள்.

பிராமண சன்னியாசிகள் சமஸ்கிருத மொழியில் பலநூல்களை இயற்றினர். ஜைனத்துறவிகள் அர்த்தமாகதியில் பல புத்தகங்களை எழுதினுர்கள். பௌத்தர்கள் தங்களுடைய நூல்களுக்கு சமஸ்கிருதம் தவிர பாலி மொழியையும் பயன்படுத்தினுர்கள். பாலி அவர்களது இலக்கிய மொழியாக விளங்கியது. பாலியும் அர்த்தமாகதியும் பெருமளவில் சமஸ்கிருதத்தை ஒத்திருந்தன. தெற்கே அனேகத் தமிழ்க் கவிதைகளும் இயற்றப்பட்டன. இவ்வாறு இக்காலத்தில் அனேக நூல்கள் எழுதப்பட்டன. கல்வியில் மிகவும் புகழ் பெற்ற நகரங்களான காசி, தட்சசீலம், மதுரை ஆகியவைவிளங்கின.

# 4. கி. மு. 323 - கி. மு. 200

அலெக்சாந்தரின் படை யெடுப்புக்குப் பின் மௌரிய வம்சத்தைச் சேர்ந்த சந்திர குப்தன் மகதத்தின் மன்னன் ஆனுன். அலெக்சாந்தருக்குப் பின்னர் பெர்ஷியாவின் அரசனுகப் பதவி ஏற்ற ஸெலுகஸைப் போரில் வென்று பெர்ஷியாவுக்கும் சிந்துவுக்கும் இடையே உள்ள பகுதிகள் அனைத்தையும் அவன் பெற்றுன். சந்திரகுப்தன் மிகச் சிறந்த வீரன். இந்து குஷ்ஷிலிருந்து அஸ்ஸாம் வரையிலும், இமாலயத்திலிருந்து மைசூர் பீட பூமி வரையிலும் அவனது ஆட்சி

பரவியிருந்தது. சந்திரகுப்தனுக்கு மந்திரியாக இருந்து பல வகையிலும் உதவியவன் சாணக்கியன். அவன் கௌடில்யன் என்ற பெயராலும் அழைக்கப்பட்டான்.

சாணக்கியன் மிகச் சிறந்த ராஜதந்திரியாகவும் நிர்வாகி யாகவும் விளங்கியவன். அரசாங்க நிர்வாக முறைகளை விவரிக்கும் அர்த்த சாஸ்திரம் என்ற நூலை அவன் தனது மன்னனுக்காக எழுதினான். சந்திர குப்தனின் பரந்த சாம் ராஜ்யம் முழுவதிலும் நிர்வாகம் எந்த அளவு திட்டமிடப்பட்டு திறமையோடு இயங்கி வந்தது என்பதை சாணக்கியனின் அர்த்த சாஸ்திரம் தெளிவாக விவரித்தது.

அரசனின் அன்றாட நடவடிக்கைகள் ஒரு நிச்சயமான திட்டத்தின் படியே நடைபெற்றன. அவன் விழித்திருக்கும் ஒவ்வொரு அரை மணி நேரத்திற்கும் அதற்கென ஒரு பணி ஒதுக்கப்பட்டிருந்தது. மன்னனுக்கு அவனது அலுவல்களில் உதவ மந்திரிகளின் குழு ஒன்றும் இருந்தது.

சாம்ராஜ்ஜியம் பல ராஜதானிகளாகப் பிரிக்கப்பட்டு சக்ரவர்த்தியின் புத்திரர்கள் அல்லது உறவினர்களால் நிர்வகிக்கப்பட்டது. ராஜதானிகளும் சிறு சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பகுதிக்கும் தனித்தனி நிர்வாகக் குழுக்கள் அமைக்கப்பட்டன. அரசாங்கத்துக்கு ஏழு இனங்கள் மூலம் வருமானம் வந்தது. நிலவரி, மற்றும் சுரங்கங்கள், காடுகள், வாணிபம், தொழில் ஆகிய பலவற்றிலிருந்தும் அரசாங்கத்துக்குப் பணம் வந்தது. அவற்றை வசூலிக்க எண்ணற்ற அதிகாரிகள் இருந்தனர். செலவினங்கள் தெய்வ வழிபாடு, தானம், அரண்மனைச் செலவு, பஞ்சங்களின் போது மக்களுக்கு உணவளித்தல், ராணுவத்துக்குத் தேவையான உணவு போன்று பல தரப்பட்டதாக இருந்தது. நிர்வாகம் பல பகுதிகளாகப் பிரிக்கப் பட்டு ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு கண்காணிப்பாளர் (அத்தியக்ஷர்) பொறுப்பாக இருந்தார். ராணுவ அலுவலகம் ஆறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பகுதியின் நிர்வாகத்தையும் ஒவ்வொரு குழு

ஏற்றுக் கொண்டிருந்தது. ரதப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை போன்ற ஒவ்வொரு வகை ராணுவப்பிரிவிலிருந்தும் ஒவ்வொரு அதிகாரி இந்தக் குழுவில் அங்கத்தினராக நியமிக்கப் பட்டார். நகரங்களிலும் நகராட்சியைக் கவனிக்க ஆறு மன்றங்கள் இருந்தன. ஒவ்வொரு மன்றமும் நகர நிர்வாகத்தின் ஒவ்வொரு பிரிவுக்குப் பொறுப்பாக இருந்தது.

ஸோன், கங்கை ஆகிய நதிகளின் சங்கமஸ்தானத்தில் (இன்றைய பாட்னாவுக்கு அருகில்) தலைநகரான பாடலி புத்திரம் கட்டப்பட்டது. அதன் நீளம் 9 மைல்; அகலம் 2 மைல். தலை நகரைச் சுற்றி பாதுகாப்பாக மரத்தினால் ஆன சுவர் ஒன்று எழுப்பப்பட்டிருந்தது. அந்த சுவற்றில் 64 கதவுகளும் 570 கோபுரங்களும் இருந்தன. மன்னரின் அரண்மனை மரத்தினாலேயே கட்டப்பட்டிருந்தது. அதன் தூண்கள் தங்கத்தினால் ஆன கொடிகளைக் கொண்டு அலங்கரிக்கப்பட்டிருந்தன. இந்தத் தங்கக் கொடிகளின் மீது வெள்ளியினாலான பறவைகள் பொருத்தப்பட்டிருந்தன. அரண்மனைக்கருகே சிறந்த பூங்கா ஒன்றும் இருந்தது. அந்த நாட்களில் உலகத்திலேயே தலை சிறந்த அரண்மனையாகத் திகழ்ந்த மன்னர் மாளிகையில் ஆறு அடி விட்டமுள்ள தங்கப் பாத்திரங்கள் பயன் படுத்தப் பட்டன. அரச பல்லக்கும் தங்கத்தினால் கவசமிடப் பட்டிருந்தது. அரசனுடைய யானைகளும் தங்கத்தினாலேயே அலங்கரிக்கப்பட்டிருந்தன. யவன தேசத்துப் பெண் வில்லாளிகள் மன்னருடைய மெய்க் காவலராகவும் தனிப்பட்ட பணியாளர்களாகவும் இருந்தனர்.

மிகச்சிறந்த முறையில் 25 ஆண்டுகள் ஆட்சி புரிந்த பின்னர் சந்திரகுப்தன் உலக வாழ்வை விடுத்து ஜைனத் துறவியானான். அவனுடைய குரு பத்ர பாகுவைப் பின் பற்றி மைசூருக்கு நடந்து சென்றான். அங்கு எளிய வாழ்க்கையையும் மேற் கொண்டான். இறக்கு முன் ஸ்ரவண பெலகோலா என்னும் இடத்தில் ஜைனத் துறவிகளுக்கான

ஒரு மடத்தையும் கட்டினன். சந்திரகுப்தனின் மரணத்துக் குப்பின், அவனைப் போலவே சிறந்த மன்னனாக விளங்கிய பிந்து சாரன் பதவியேற்றான். பிந்து சாரனின் மரணத்துக் குப் பின்னர் ஆட்சியைக் கைப்பற்றும் விஷயத்தில் அவனு டைய புத்திரர்களிடையே போட்டி எழுந்தது. அவன் மரண மடைந்து நான்கு ஆண்டுகள் கழிந்த பின்னரே சகோதரர் களுக்கிடையே எழுந்த இந்தப் போட்டியில் வெற்றி பெற்று அசோகனால் சக்கரவர்த்தியாக முடி சூட முடிந்தது.

அசோகன் பதவி ஏற்று எட்டு ஆண்டுகள் கழிந்தபோது அவனுடைய அதிகாரத்தை எதிர்த்து கலிங்கம் புரட்சி செய் தது. இந்தப் புரட்சியைக் கடுமையான முறையில் அசோகன் அடக்கினன். அவனுடைய போர் வீரர்களால் நூறாயிரம் பேர் கொல்லப்பட்டனர். அதற்கும் பல மடங்கு அதிக மான பேர் இறந்தனர். இது அசோகனின் மனத்தில் துயரத்தை விளைவித்து, ஒரு பெருத்த மாறுதலைத் தோற்று வித்தது. அவன் தர்மத்தின் பாதையில் திரும்பினன்.

சகோதர மக்களிடம் அன்பு செலுத்த வேண்டியது ஒவ்வொரு மனிதனின் கடமையாகும் என்பதை அவன் உணர்ந்தான். மிருகங்களுக்கும் கூட எந்த வகையிலும் துயர் அளிக்கக் கூடாது என்று முடிவுசெய்தான். தன்னுடைய அரண்மனையில் மாமிசம் உணவாக பயன்படுத்தப் படுவதை வெகுவாகக் குறைத்தான். மதச் சடங்குகளுக்காக மிருகங் களைப் பலியிடுவதை நீக்க முயன்றான். மக்கள் அனைவரும் தன்னுடைய குழந்தைகள் என்ற உணர்வு அவனுள் எழுந்தது.

பெற்றோருக்குக் கீழ்ப்படிவது, ஜீவராசிகள் அனைத் திடமும் அன்பு செலுத்துவது, எப்போதும் உண்மையே பேசுவது ஆகியவையே உண்மையான தர்மம் என அசோகன் மக்களுக்கு உபதேசித்தான். மக்களிடையே தர்மத்தைப் பிரசாரம் செய்யவும், அவர்கள் தர்மத்தைச் சரிவர கடைப் பிடிப்பதை மேற்பார்வை இடவும் அதிகாரிகளை நியமித்தான்.

தன்னுடைய உபதேசங்களைத் தூண்களிலும் கற்களிலும் மற்றும் விழாபோன்ற காரணங்களுக்காக மக்கள் கூடும் பொது இடங்களிலும் பொறித்து வைத்தான். அவை அசோகனின் சாஸனங்கள் என அழைக்கப்பட்டன. இலக்கிய மொழிகளான சமஸ்கிருதம், பாலி போன்றவற்றில் அவை எழுதப்படவில்லை. மக்கள் பேசும் மொழியிலேயே அவை இருந்தன. ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா ஆகியவற்றைச் சேர்ந்த பல நாடுகளுக்கும் தர்மத்தைப் பிரசாரம் செய்ய அவன் தூதுவர்களையும் அனுப்பினான்.

அவனுடைய கடைசி நாட்களில் அசோகன் பௌத்த பிட்சுவானதாகவும் பௌத்த மடாலயங்களுக்குத் தலைவனாக இருந்ததாகவும் கூறப்படுகிறது. கௌதமபுத்தரின் வாழ்க்கையோடு சம்பந்தப் பட்டிருந்த இடங்களுக்கெல்லாம் அசோகன் புனித யாத்திரை மேற்கொண்டான். அனேக பௌத்த மடாலயங்களும் ஸ்தூபங்களும் அவனால் கட்டப்பட்டன. அவனுடைய ஆட்சிக் காலத்தில் பௌத்தத்தின் ஒரு பிரிவான ஹீனயானம் இலங்கையில் பரவியது.

அசோகனது மரணத்துக்குப் பின்னர் மகதம் அதன் முக்யத்துவத்தை இழந்தது.

இந்தக் காலத்தில் பிராமணர்களாலும் பௌத்தர்களாலும் ஜைனர்களாலும் அனேக நூல்கள் எழுதப்பட்டன. புகழ்பெற்ற சமஸ்கிருத நாடக ஆசிரியர் பாஸன் வாழ்ந்தது அப்போதுதான். உதயணன்—வாஸவதத்தையின் காதலை விவரிக்கும் நாடகம் அவன் எழுதியதுதான். இந்தக் காலத்தில் இரண்டு வகையான எழுத்து முறைகள் பழக்கத்தில் இருந்து வந்தன. அசோகன் பொறித்த சாசனங்களில் இவ்விரண்டு முறைகளுமே பயன்படுத்தப் பட்டன. இடமிருந்து வலமாக எழுதும் முறை பிராமி என அழைக்கப்பட்டது. மற்றது வலமிருந்து இடமாக எழுதும் கரோஷ்தி. இந்த முறை வடமேற்கு இந்தியாவில் உபயோகத்தில் இருந்து பின்னர் கைவிடப்பட்டது.

மௌரியர்களின் காலத்தில் அனேக சிறிய கோயில்கள் கட்டப்பட்டன. ஆனால் அவை அனைத்தும் மறைந்து விட்டன. கோயில்களின் முன்னேயும், சாஸனங்களைப் பொறிக்கவும் அசோகன் நிர்மாணித்த உயரமான தூண்கள் இன்றும் நிலைத்து நிற்கின்றன.

# 5. கி. மு. 200—கி. பி. 300

**மௌ**ரியர்களுக்குப் பின்னர் பாடலிபுத்திரத்தில் சுங்க வம்சத்தினர் ஆட்சி புரிந்தனர். அவர்களைப் பற்றிக் குறிப்பிட்டுக் கூறும்படியாக எதுவுமில்லை. அவர்களுடைய காலத்தில் இலக்கண வித்தகரான பதஞ்சலி வாழ்ந்தார்; இரண்டாம் சுங்க மன்னன் அக்கினி மித்திரன் காளிதாஸன் எழுதிய நாடகம் ஒன்றில் கதாநாயகனாக இடம் பெற்றிருந்தான்—இந்த இரண்டையும் தவிர அவர்களது ஆட்சியில் வேறெதுவும் நிகழவில்லை.

சுங்கர்களின் காலத்தில் அருகே ஆந்திரர்களின் ஆட்சியும் நடைபெற்றது. ஆந்திர மன்னர்கள் சதகர்ணிகள் என அழைக்கப்பட்டனர். கோதாவரியின் கரையில் அமைந்திருந்த நாஸிக் அவர்களது தலைநகராக முதலில் விளங்கியது. வடக்கே கங்கையிலிருந்து தெற்கே கோதாவரி வரையில் அவர்களது ஆட்சி பரவியிருந்தது.

இந்தக் காலத்தில் நாடெங்கும் பௌத்தத் துறவிகள் நிறைந்திருந்தனர். பௌத்தர்களுக்கான அனேக சைத்தியங்கள் நிறுவப்பட்டன. அவை செயற்கைக் குகைகளைப் போன்று தோற்றமளித்தன. இப்போதும்கூட ஏதோ ஒரு சமயம் வேதயக்ஞங்கள் நிகழ்ந்தன. அவற்றுக்காக மலை

களின் பக்கலில் குகைகள் குடையப்பட்டன. கற்களைக் கொண்டு சிறந்த ஸ்தூபங்களும், செங்கலைக் கொண்டு பெரும் சங்கிராமங்களும் நிர்மாணிக்கப்பட்டன. எல்லா வகையான துறவு மார்க்கங்களுக்கும் மன்னர்களும் வணிகர்களும் பெரும் நன்கொடைகளை அளித்தனர். கோயில் வழிபாடு முக்கிய மான அம்சமாக விளங்கிய மஹாயானம் என்னும் பௌத்தத் தின் ஒரு பிரிவு பெரும் செல்வாக்கு பெற்றது. மஹாயான நூல்கள் சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்டன. பெரும் பான்மையான மஹாயான பிட்சுக்கள் அம்மொழியில் தேர்ந்த அறிஞர்களாக விளங்கினார்கள். அவர்கள் அநேக மத சார்பற்ற நூல்களை எழுதினார்கள்.

ஆந்திர மன்னர்களின் காலத்தில் பல வெளி நாட்டினர் இந்தியாவில் பரவி தங்கள் வம்சத்தை நிலைபெறச் செய்தனர். சக பல்லவர்கள், யவனர்கள், குஷான் இனத்தை சேர்ந்த துருஷ்கர்கள் ஆகியோர் அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள். விரைவில் இந்து மதம் அவர்களையும் ஆகர் ஷித்தது. அவர்கள் இந்துப் பெயர்களை வைத்துக் கொண்ட வர்களாக சைவ அல்லது வைஷ்ணவ, பௌத்த அல்லது ஜைனத் தெய்வங்களை வழிபட்டனர். விரைவில் இந்துமதம் அவர்களை முடிவாக ஏற்றுக் கொண்டது. பல்லவனான குருபாரா சைவனாகவும், சகனான நகபானா ஜைனனாகவும், யவனனான மிலிந்தன் ஹீனயான பௌத்தனாகவும், குஷான் இனத்தைச் சேர்ந்த கனிஷ்கன் மஹாயான பௌத்தனாகவும், மற்றொரு யவனனான எலியதூரா வைஷ்ணவனாகவும் விளங்கி னார்கள். இந்த வெளிநாட்டு மன்னர்கள் காந்தாரம், பஞ்சாப் சிந்து, சௌராஷ்டிரா ஆகிய பகுதிகளில் ஆட்சி புரிந்தனர்.

கி. மு. 56-ல் ஆரம்பகால சக வம்சம் அவந்தி மன்னனான விக்ரமாதித்தனால் அழிக்கப் பட்டது. கி. பி. 77-ல் ஸால் டானாவின் தலைமையில் சிகர்கள் மீண்டும் தங்களுடைய அதிகாரத்தை மால்வாவில் நிலை நாட்டினர். முதல் சக மன்னனின் பட்டாபிஷேகத்தின் நினைவாக சக சகாப்தம் தோற்று விக்கப்பட்டது. அதுவே பின்னர் சாலி

வாகன சகாப்தம் என அழைக்கப்பட்டது. அதன் பிறகு சக பல்லவர்களின் அதிகாரம் பெருகியது. ஆந்திரர்களின் அதிகாரம் குறையலாயிற்று.

இப்போது ஆந்திரர்களின் அதிகாரம் கிழக்குக் கடற் கரைப் பகுதிகளுக்கு மாறியது. தன கடகா என்ற ஆந்திரத் தலைநகரின் கிருஷ்ணா நதிக் கரையில் கடைசி ஆந்திர மன்னன் அமராவதியின் மடாலயத்தைக் கட்டு வித்தான். அது மிகச் சிறந்த ஒன்றாக விளங்கியது. ஆனால் இங்கும் பல்லவர்களின் அதிகாரம் பரவலாயிற்று. முடிவில் ஆந்திரர்களின் ஆட்சியை முழுமையாக அழித்து விட்டுப் பல்லவர்கள் காஞ்சியில் ஒரு ராஜ்யத்தை ஸ்தாபித்தார்கள். தமிழ் மன்னர்களின் எல்லை யாக விளங்கிய அங்கு பல்லவ மன்னன் சிவஸ் கந்தன் (சுமார் கி. பி. 250-ல்) அநேக வேத யக்ஞங்களை நிகழ்த்தினான். பல பிராமண குடும்பங்களை அங்கு குடியேறச் செய்தான்.

கி. மு. 200 முதல் கி. பி. 40 வரை யவன மன்னர்கள் காந்தாரத்தில் ஆட்சி புரிந்து வந்தனர். யவன மன்னர்களுள் தலை சிறந்தவனாக விளங்கியவன் மிலிந்தன். ஸகலா (இப் போதைய சியால்கோட்) அவனது தலை நகரமாக இருந்தது. யவன மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் பல கிரேக்கக் கலைஞர்கள் காந்தாரத்தில் குடியேறினார்கள். புத்தரின் வடிவையும் அவரது வாழ்க்கையோடு சம்பந்தப் பட்டிருந்த பல சம்பவங்களையும் அவர்கள் சிற்பங்களாகவும் சித்திரங் களாகவும் படைத்தார்கள். அவர்களது கலைப் பாணி இந்தியப் பாணியிலிருந்து வேறு பட்டிருந்தது. விரைவில் அது அழிந்தும் விட்டது!

யவனர்களின் ஆட்சி காரணமாக, வேத காலத்தில் இந்தியருக்குத் தெரிந்திராத ஜோதிடக் கலையை ஹிந்துக்கள் கிரேக்கர்களிடமிருந்து கற்றறிந்தனர். வாரத்துக்கு ஏழு நாட்கள் என்ற கணக்கும், ஒவ்வொரு நாளும் சூரியன், சந்தி திரன், புதன், குரு, சுக்கிரன், செவ்வாய், சனி ஆகிய கிரகங் களின் பெயரைக் கொண்டு அழைக்கப்படத் தொடங்கியதும்

கிரேக்கர்களிடமிருந்து கற்றுக் கொள்ளப் பட்டவை. ஒவ்வொரு நாளையும் ஒல்வொரு குறிப்பிட்ட கிரகம் ஆட்சி புரிவதாக அவர்கள் நம்பினர்.

கி.பி. 40-ல் யவன ஆட்சி துருஷ்கரால் அழிக்கப்பட்டது. குஷான் வம்சத்தைச் சேர்ந்த கனிஷ்கன் துருஷ்க மன்னர்களுள் மிகச் சிறந்தவனுக விளங்கினுன். புருஷபுரமும் (பெஷாவர்) தட்ச சீலமும் அவனது தலைநகரங்களாக இருந்தன. மஹாயானப் பிரிவைப் பின்பற்றும் பௌத்தத் துறவிகளுக்காக அவன் அநேக மடாலயங்களைக் கட்டுவித்தான். நாகார்ஜுனர், அசுவகோஷர் போன்ற அநேக பிரசித்தி பெற்ற பௌத்த பேராசிரியர்கள் அவனது ஆதரவைப் பெற்றிருந்தனர்.

இந்தக் காலத்தில் ரோமானியா சாம்ராஜ்யமும் சீனப் பேரரசும் இந்தியாவுடன் பெருமளவில் வியாபாரத்தொடர்புகள் கொண்டிருந்தன. இந்தத் தொலை தூர நாடுகளுக்கு இந்தியாவிலிருந்து தூதுவர்கள் சென்றனர். பர்மா, சையாம், மற்றும் அதற்கு அப்பாலும் அநேக இந்தியக் குடியேற்றங்கள் நிகழ்ந்தன. இந்திய மதக் கிளைகளும் கல்வி முறைகளும் இந்த நாடுகள் எங்கினும் பரவின. மஹாயானம் சீனுவில் நிலை பெற்றது.

தொழில் துறையிலும் இலக்கியத் துறையிலும் தென் இந்தியா மிகச் சுறு சுறுப்புடன் இயங்கியது. சேர நாட்டின் பலப் பலத் துறை முகங்கள் ரோமானிய, சீன வியாபாரிகளின் சந்திக்கும் இடங்களாக விளங்கின. அநேக ரோமானிய வணிகர்கள் மதுரையிலும் மலபாரிலும் குடியேறினுர்கள். இக் காலத்திய பழம் பெரும் தமிழ் நூல்கள் தமிழ் மன்னர்களுக்கு மெய்க் காவலராக விளங்கிய யவன மங்கையரைப் பற்றியும், யவனத் தொழிலாளர்களால் கட்டப்பட்ட கோட்டைகளை அழித்த போர் யந்திரங்களைப் பற்றியும் விவரித்தன. தமிழுக்கு இலக்கணம் வகுந்த தொல் காப்பியர் வாழ்ந்ததும் இக் காலத்தில் தான்.

# 6. கி. பி. 300 - கி. பி, 600

கி. பி. 300-ல் வட இந்தியாவில் குப்தர்கள் ஆட்சிக்கு வந்தனர். குப்த ஆட்சியைத் தோற்று வித்தவன் முதலாம் சந்திர குப்தன். அவனது புத்திரன் சமுத்திர குப்தன் இந்தியா முழுமைக்கும் சக்கரவர்த்தியாக ஆக வேண்டும் என விரும்பினுன். அவனுடைய வலிமைக்கு முன் அநேக மன்னர்கள் பணிந்து அவனை அரசர்க்கரசனுக ஏற்றுக் கொண்டனர். அவ்வாறு செய்யத் தவறியவர்களை அவன் போரிட்டு வென்முன். இலங்கை மன்னன் மேகவர்ணனும் தன்னுடைய பாராட்டுதலை சமுத்திர குப்தனுக்கு அனுப்பி வைத்தான்.

வேதயக்ஞங்களிலேயே மிகச் சிறந்ததான அசுவமேத யாகத்தை சமுத்திர குப்தன் நடத்தினுன். அவன் சிறந்த வீரனுக மட்டும் அல்லாமல் தேர்ந்த அறிஞனுகவும் இசை வல்லுனனுகவும் விளங்கினுன். அநேக அறிஞர்களுக்கும் கவிஞர்களுக்கும் அவனுடைய ஆதரவு கிட்டியது. அவனது ஆட்சியின் சிறப்பு அசோக ஸ்தூபம் ஒன்றில் சமஸ்கிருத மொழியில் ஒரு கவிதையாகப் பொறிக்கப்பட்டுள்ளது,

அவனுக்குப் பின்னர் அரச பதவியேற்ற அவன் புத்திரன் இரண்டாம் சந்திரகுப்தன் தந்தையைவிடச் சிறந்த சக்கர வர்த்தியாக விளங்கினுன். தட்சிணத்தைச் சேர்ந்த வாகடக, கதம்ப மன்னர்கள் அவனுக்கு நண்பர்களாயினர். இரண்டாம் சந்திரகுப்தன் மாலவாவில் ஆண்டுவந்த சகர்களின் அதிகாரத்தை நிர்மூலமாக்கினுன்.

இரண்டாம் சந்திரகுப்தனின் காலத்தில்தான் பாஹியான் என்ற சீன யாத்ரிகன் இந்தியாவுக்கு வந்தது. பௌத்தர்களைப்பற்றிய சம்ஸ்கிருத நூல்களைச் சேகரிப்பது பாஹி

யானின் நோக்கமாக இருந்தது. குப்த ஆட்சியின் சிறப்புக் களைப்பற்றியும், மக்களின் திருப்தி நிறைந்த இன்பமயமான வாழ்க்கைபற்றியும் பாஹியானின் எழுத்துக்களிலிருந்து தெரிந்துகொள்ள முடியும்.

சந்திரகுப்தனின் புத்திரன் குமாரகுப்தன். கி. பி. 455-ல் குமாரகுப்தனின் மரணத்துக்குப் பின்னர் குப்தர் களின் அதிகாரம் க்ஷீணிக்கத் தொடங்கியது.

ஹீணர்களும், இதர வெளிநாட்டு இனத்தவரும் இந்தி யாவுக்குள் அலையலையாக வரத்தொடங்கினர்கள். அவர்கள் முதலில் குப்தமன்னர்களால் தோற்று ஓடும்படி விரட்டப் பட்டாலும் பின்னர் தொடர்ந்து படையெடுத்து வந்து தங்களுடைய ஆட்சியை ஸ்தாபித்தார்கள். ஹீணவீரருள் ஒருவனான தோரமாணு காஷ்மீரத்தின் மகாராஜாவாக முடி சூடினன். அவனது மகனான மிஹிரகுலனும் சக்தி வாய்ந்த மன்னனாகத் திகழ்ந்தான். ஆனல் மால்வாவில் ஆட்சிக்கு வந்த புதிய அரசனான யசோதர்ம தேவனால் அவன் கி. பி. 535-ல் போரில் தோற்கடிக்கப்பட்டு நிலைகுலைந்தான்.

யசோதர்ம தேவன் மிகச் சிறந்த வீரனாக விளங்கியவன்; அநேக போர்க்களங்களில் வெற்றிவாகை சூடியவன். அவனது காலத்துக்கு முன்னரும் பின்னரும் இருந்த அநேக மன்னர் களைப் போலவே யசோதர்ம தேவனுக்கும் 'விக்கிரமாதித் யன்' என்ற பட்டம் அளிக்கப்பட்டது. மால்வாவில் உள்ள இரு கீர்த்தி ஸ்தம்பங்களில் அவனது புகழ் பொறிக்கப் பட்டுள்ளது.

குப்த மன்னர்கள் சம்ஸ்திருத மொழிக்கு பெரும் ஆதரவு அளித்து வந்தனர். யசோதர்ம தேவனும் கல்விமான் களுக்கும் கலைஞர்களுக்கும், கவிஞர்களுக்கும் பெரும் ஆதரவு அளித்தான். அவனுடைய அரசவையை ஒன்பது அறிஞர் கள் அலங்கரித்தனர். அவர்கள் விக்கிரமாதித்யனின் 'நவரத் தினங்கள்' என அழைக்கப்பட்டனர். அவர்களில் மிகச் சிறந்தவராக விளங்கியவர் உலகின் தலைசிறந்த கவிஞரான

காளிதாசர். ஜோதிடக்கலை, வானசாஸ்திரம் ஆகியவை குறித்து ஒப்பற்ற நூல்களைப் படைத்தவரான மிகிரரும் விக்கிரமாதித்யனின் அரசவையை அலங்கரித்த நவரத்தினங்களுள் ஒருவர்.

குப்த மன்னர்கள் வைஷ்ணவர்களாக இருந்தனர். இக்காலத்தில் சிவ, விஷ்ணு வழிபாடுகள் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தன. பௌத்தம் படிப்படியாகத் தனது செல்வாக்கை இழக்கத் தொடங்கியது. மக்கள் பக்திக்கு இடமளிக்கக்கூடிய ஒரு மதத்தை விரும்பினுர்கள். புத்தர் ஒரு மானிடராக இருந்த காரணத்தால் அவரிடம் மக்களால் பக்திகொள்ள முடியவில்லை. ஆனுல் சிவன், விஷ்ணு ஆகிய தெய்வங்களிடம் அவர்களுக்கு மிகுந்த பக்தி இருந்தது. விஷ்ணுவின் அவதாரங்களை (குறிப்பாக ராமன், கிருஷ்ணன்) பற்றியும், சிவலீலைகள் குறித்தும் அவர்கள் பாடிப் போற்றி மகிழ்ந்தனர். இத்தெய்வங்களைப்பற்றிய புராணக் கதைகளைப் படித்தனர். பௌத்த மதம் இத்தகைய காரணங்களால் க்ஷீணித்து, சைவ வைஷ்ணவ மதங்கள் தலைதூக்கின.

இக்காலத்தில் பெரும் கட்டிடங்கள் எழுந்தன. குப்தர்கள் அனேகக் கோயில்களைக் கட்டினர். திருவிழாக்களில் சைவர்களும் வைஷ்ணவர்களும் எந்தவித மதச்சண்டையும் இன்றி ஒருமித்துக் கலந்து கொண்டனர். குப்தர்களைக் காட்டிலும் வாகாடகர்கள் கட்டிய கோயில்கள் மிக அழகாக இருந்தன. அஜந்தா மலைக் கோயில்களில் ஒரு சிலவும் அவற்றில் உள்ள சிற்ப—சித்திரங்களும் வாகாடகர்களால் படைக்கப்பட்டவை.

குப்தர்களின் காலத்தில் வணிகத்துறை மேலும் பெருகியது. இந்தியாவுக்கும் எகிப்துக்கும் இடையே நெருங்கிய வியாபாரத் தொடர்பு இருந்தது. கப்பல்கள், நிரம்பி வழியும் பொருள்களுடன், தென் இந்தியத் துறைமுகங்களிலிருந்து அலெக்சாந்திரியாவுக்கும் சீனத் துறைமுகங்களுக்கும் சென்றன.

இக்காலத்தில் தென் இந்தியா மிகவும் புகழ்வாய்ந்து விளங்கியது. இக்காலத்தின் தொடக்கத்தில் கரிகாலச் சோழன் தமிழ்நாடு முழுதும் இன்றி இலங்கைக்கும் சக்கர வர்த்தியாக விளங்கினன். அவன் தனது தலைநகரத்தை உறையூரிலிருந்து காவேரிப்பட்டணத்துக்கு மாற்றினன்.

இக்காலத்தின் முடிவுப் பகுதியில் வாழ்ந்த சேர மன்னன் செங்குட்டுவன் மிகச் சிறந்த வீரனுகத் திகழ்ந்தான். கங்கைக்கரைவரை அவன் தனது படையினரைக்கொண்டு சென்றதாகக் கூறப்படுகிறது. கரிகாலச் சோழனைப் போலவே செங்குட்டுவனும் வட இந்திய மன்னர்களால் பெரிதும் மதிக்கப்பட்டவன். அவனுடைய அவையில் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இயற்றப்பட்டன.

# 7. முப்பெரும் சக்கரவர்த்திகள்

ஏழாம் நூற்றுண்டில் கனோஜ், வாதாபி, காஞ்சி ஆகியவை பெரும் அரசாட்சிகளாகத் திகழ்ந்தன. கனோஜ் வேதகாலத்திலேயே மிகவும் புகழ்வாய்ந்த நகரமாக இருந்தது. ஏழாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஹர்ஷன் அதன் மன்னன் ஆனுன். பதவியேற்ற உடனேயே தன் ராஜ்யத்தை விஸ்தரிப்பதில் கவனம் செலுத்தத் தொடங்கினுன் அவன். விரைவில் நர்மதைக்கு வடக்கே இருந்த பகுதிகள் அனைத்திலும் அவனது அதிகாரம் பரவியது. தெற்கே வரவிரும்பிய அவனை நர்மதை நதிக்கரையிலேயே வாதாபிப் புலிகேசி நிறுத்தி வைத்தான்.

ஹர்ஷனின் ஆட்சி மிகவும் சிறந்து விளங்கியது. தனது நாடு முழுவதிலும் அவன் அடிக்கடி சுற்றுப் பயணங்களை மேற்கொண்டான். அங்கங்கே தங்கி அரசாங்க விவகாரங்

களை உடனுக்குடன் நேரடியாகக் கவனித்து, எழும் பிரச்னை களைத் தீர்த்து வைத்தான். விரிந்த சாம்ராஜ்யம் எங்கும் அவனுடைய கடுமையான மேற் பார்வை பரந்து இருந்தது. புத்தருக்கும், சிவனுக்கும், சூரிய தேவனுக்கும் அவன் தனது தலைநகரில் பெரும் கோயில்களை எழுப்பினுன். இத் தெவங் களின் விழாக்கள் பிரபலமாக நடத்தப்பட்டன. அறிஞர்கள் அவனது பேராதரவைப் பெற்றனர். ஹர்ஷனே சிறந்த அறிஞனுகவும் சம்ஸ்கிருதக் கவிஞனுகவும் திகழ்ந்து அநேக நாடகங்களை இயற்றினுன்.

கனேஜில் ஹர்ஷன் ஆட்சி புரிந்த காலத்தில் சீன யாத் ரிகன் யுவான் சுவாங் இந்தியாவுக்கு வந்திருந்தான்.

ஹர்ஷனின் மரணத்துக்குப் பின் அவனது பரந்த சாம் ராஜ்யம் சிறு சிறு நாடுகளாக உடைந்து சிதறியது.

சாளுக்கிய அரசு ஐந்தாம் நூற்ருண்டின் தொடக்கத் திலேயே ஸ்தாபிக்கப்பட்டு விட்டிருந்தாலும் புலிகேசி வாதா பியைத் தலைநகராக நிறுவிய போதே வலு மிகுந்த ஒன்ருக ஆயிற்று. அவனது பேரன் இரண்டாம் புலிகேசி அதைத் தனது சாம்ராஜ்யத் தலைநகர் ஆக்கினுன். ஹர்ஷனை நர்ம தைக் கரையில் நிறுத்தி வைத்தவனும் அவனே. கி.பி. 612-ல் அவன் கீழ்த் திசையில் படையெடுத்து, அந்தப் பகுதி களுக்குத் தனது சகோதரன் குப்ஜ விஷ்ணு வர்த்தமனை மன்னன் ஆக்கினுன். தெலுங்குப் பிரதேசங்களுக்கு அரச னுகிய குப்ஜ விஷ்ணு வர்த்தமனுக்கு வேங்கி தலைநகராக இருந்தது. விஷ்ணு வர்த்தமனின் வம்சம் கிழக்கு சாளுக்கி யர்கள் என அழைக்கப்பட்டது.

புலிகேசி அடுத்து தெற்கே தன் கவனத்தைச் செலுத் தினுன். ஆனுல் காஞ்சி மன்னன் மஹேந்திரவர்மனுல் அவனது படையெடுப்பு தடுத்து நிறுத்தப்பட்டது. புலிகேசி வாதாபிக்குத் திரும்ப வேண்டியதாயிற்று. கி. பி. 642-ல் மஹேந்திரவர்மனின் புத்திரன் புலிகேசியைப் போரில் கொன்ருன்.

புலிகேசியின் மகனுன விக்ரமாதித்தன் வாதாபியைப் பல்லவர்களிடமிருந்து திரும்ப மீட்டதோடு தெற்கே படையெடுத்து திருச்சிராப்பள்ளி வரை சென்று வெற்றிக் கொடி நாட்டினுன். அவனது ஆட்சி பல ஆண்டுகள் பெரும் புகழோடு நீடித்தது. சாளுக்கியர்களின் காலத்தில் தட்சிணத்தில் அநேகக் குகைக் கோயில்கள் நிறுவப்பட்டன. சைவ வைஷ்ணவ, ஜைனத் தெய்வங்களின் கோயில்களாக அவை விளங்கின.

கி.பி. மூன்ரும் நூற்ருண்டில் காஞ்சியில் ஆண்ட பல்லவ மன்னர்களின் பரம்பரையில் வந்தவன் மஹேந்திரவர்மன். கலப்புத் திருமணத்தின் காரணமாகப் பல்லவர்கள் அப்போது தமிழர்கள் ஆகிவிட்டிருந்தனர். தெலுங்குப் பிரதேசத்தின் ஒரு பகுதியிலும் தமிழ் நாட்டின் பெரும் பகுதிகளிலும் அவனது ஆட்சி பரவியிருந்தது. மஹேந்திரவர்மன் சிறந்த கவிஞனுகவும் இசை வல்லுனனுகவும் விளங்கியவன். அவன் காலத்தில்தான் தமிழ்நாட்டில் முதன்முதலாகக் கற்களாலான கோயில்கள் கட்டப்பட்டன. அவனுக்குப் பின் பதவியேற்ற அவன் மகன் நரசிம்மவர்மன் தந்தையைக் காட்டிலும் சிறந்த அரசனுக விளங்கினுன். சிற்பக் கலையில் சிறந்து விளங்கும் மகாபலிபுரம் அவனுலேயே சிருஷ்டிக்கப்பட்டது.

பல்லவ ஆட்சி பரவத் தொடங்கியபோது சோழர்களின் அதிகாரம் மறைந்தது. ஆனுல் மதுரைப் பாண்டியர்களின் புகழ் மேலும் பரவியது. மாறவர்மன் எனவும் ஜடிலவர்மன் எனவும் மாறி மாறி அழைக்கப்பட்ட பாண்டிய மன்னர்கள் பல்லவர்களுக்குப் போட்டியாக விளங்கினுர்கள். அடிக்கடி அவர்களுடன் போரிட்டார்கள். பல்லவர்களைப் போலவே அவர்களும் குகைக் கோயில்களைக் குடைந்தனர். மைசூர் பிரதேசத்தை ஆண்டுவந்த கங்கர்கள் பல்லவர்களின் மிகச் சிறந்த நண்பர்களாக விளங்கினுர்கள்.

ஏழாம் நூற்ருண்டில் தமிழ் நாட்டில் மதத்துறையில் பெருத்த மறுமலர்ச்சி தோன்றியது. சிவ — விஷ்ணு வழிபாடு

கள் மகத்தான செல்வாக்குப் பெற்றன. ஜைனமும் பௌத்தமும் பெரிதும் க்ஷீணித்தன—அப்போது அவை மறைந்து விட்டன என்றே கூறலாம். அந்த நூற்றாண்டில் பெரும் தமிழ்க் கவிஞர்கள் தோன்றினர்கள். சிவனையும் விஷ்ணுவையும் போற்றி அனேகத் தமிழ் கவிதைகள் இயற்றப்பட்டன. மன்னர்கள் இக்கவிஞர்களால் மனம்மாறி சைவத்தைத் தழுவலானுர்கள். திருநாவுக்கரசர் மஹேந்திரவர்மனை ஜைனத்திலிருந்து சைவத்துக்குத் திசைமாற்றினர். ஞானசம்பந்தர் அதே விதமாக மதுரையை ஆண்ட மாறனை மனம் மாறச் செய்தார். விஷ்ணுவைப் போற்றிப் பாடிய முதல் ஆழ்வார்கள் காஞ்சிக்கு அருகில் வசித்து வந்தார்கள்.

பல்லவ, பாண்டிய மன்னர்களால் சம்ஸ்கிருத அறிஞர்களும் ஆதரிக்கப்பட்டனர். வட இந்தியாவைப் போலவே தெற்கேயும் சம்ஸ்கிருதம் சிறந்து விளங்கியது.

# 8. எட்டாம், ஒன்பதாம் நூற்றுண்டுகள்

சற்றேறக்குறைய இந்தக் காலத்தில் அநேக ராஜபுத்திரக் குடும்பங்கள் பிரபலமடைந்தன. வேதகாலத்து க்ஷத்திரிய வம்சங்களின் பெருமைகளையும் உயர்வுகளையும் அவர்கள் மீண்டும் நிலைநாட்டினர்கள். ராஜபுத்திரர்கள் மிகச் சிறந்த வீரர்களாக விளங்கினர்கள். நன்னடத்தையிலும் வாக்குத்தவருமையிலும் அவர்கள் மிகவும் கண்டிப்பு நிறைந்தவர்களாக இருந்தார்கள். பெண்களுக்கு அவர்கள் அளித்த மரியாதை மிகவும் போற்றத்தக்க விதத்தில் இருந்தது. அவர்களிடையே, குறிப்பிட்டுச் சொல்லத்தக்க

வகையில், இருந்த ஒரே குறைபாடு பொதுவான ஒரு எதிரிக்கு எதிராக அவர்கள் என்றும் ஒன்று சேர்ந்ததில்லை என்பதே. ஒவ்வொரு ராஜபுத்திரத் தலைவனும் மிகமிக அவசியமான போதும்கூட மற்றவனுக்குப் பணிய மறுத்து மிகவும் கர்வம் கொண்டு விளங்கினான். ஆனால் ராஜபுத்திரர்கள் மிகுந்த பக்திமான்களாகவும் அறிவாளிகளாகவும் இருந்தார்கள். அநேகக் கோயில்களை அவர்கள் கட்டுவித்தார்கள். கவிஞர்களையும் இசைக் கலைஞர்களையும் அறிஞர்களையும் ஆதரித்தார்கள்.

கனோஜின் யசோவர்மனும், காஷ்மீரத்தின் லலிதாதித்தனும், வங்காளத்தின் அதிசூரனும், தோமார இனத்தைச் சேர்ந்த அநங்கபாலனும், ராஷ்டிரகூட வம்சத்தைச் சேர்ந்த கிருஷ்ணனும் எட்டாம் நூற்றாண்டின் மிகச்சிறந்த ராஜபுத்திர மன்னர்களாக விளங்கியவர்கள்.

ஹர்ஷனுக்குப் பின்னர் கனோஜின் புகழ் மிக்க மன்னனாக இருந்தவன் யசோவர்மன். கி. பி. 731-ல் சீனாவுக்கு அவன் ஒரு ஸ்தானிகரை அனுப்பி வைத்தான். புகழ்பெற்ற 'மாலதி மாதவம்' இயற்றிய மிகச்சிறந்த கவிஞரான பவபூதி அவனது அரசவையை அலங்கரித்தவர்களுள் ஒருவர்.

வட இந்தியா முழுதும் புகழ் பரப்பிய சிறந்த வீரன் லலிதாதித்தன். சூரியதேவனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட அழகிய கோயில் ஒன்றை அவன் கட்டுவித்தான்.

வங்காளத்தை அதிசூரன் ஆண்டு வந்தான். மக்களிடையே மதத்தைப் பற்றிய அறிவு சற்றும் இல்லாததை உணர்ந்து கனோஜிலிருந்து அநேக பிராமண அறிஞர்களை தன்னுடைய ராஜ்யத்துக்குக் குடியேறச் செய்தான்.

அநங்க பாலன் தில்லியைக் கட்டுவித்தான். பின்னர் அது முகமதிய சுல்தான்களின் தலைநகரமாக மாறியது. இன்றைய இந்தியக் குடியரசின் தலைநகராகவும் விளங்குகிறது.

தட்சிணத்தில் வாதாபி சாளுக்கியர்களுக்குப்பின் ராஷ்டிரகூடர்கள் ஆட்சிக்கு வந்தனர். ராஷ்டிரகூட வம்சத்தின் இரண்டாவது மன்னனான கிருஷ்ண உலக அதிசயங்களுள் ஒன்றாகக் கருதப்படக் கூடிய அழகிய கைலாசக் கோயிலை எல்லோராவில் பாறைக் கோயிலாக சமைத்தான்.

காஞ்சியில் பல்லவர்கள் தொடர்ந்து ஆட்சி புரிந்து வந்தனர். எட்டாம் நூற்றாண்டின் பெரும் பகுதிக் காலத்தில் சிறந்து விளங்கியவன் நந்திவர்ம பல்லவ மல்லன். தமிழ் வைஷ்ணவத் தெய்வத் திருப்புகழ்க் கவிஞர்களுள் மிகச் சிறந்தவரான திருமங்கை மன்னனை அவன் மிகவும் போற்றி ஆதரித்தான். வைஷ்ணவத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்த நந்திவர்மன் பாண்டிய மன்னனான மாறவர்ம அரிகேசரியுடன் அடிக்கடி போரிட்டான். அரிகேசரி நந்திவர்மனுக்குச் சமமாகப் புகழ் மிகுந்து விளங்கியவன். தமிழ்க் கவிஞர்கள் அவனது பேராதரவைப் பெற்றிருந்தனர். பாண்டியர்களும் பல்லவர்களும் அநேகக் கோயில்களைக் கட்டுவித்து அவற்றுக்குப் பெருமளவில் நன்கொடைகளையும் அளித்தனர்.

எட்டாம் நூற்றாண்டு வேறு ஒரு வகையில் முக்யத்வம் பெற்று விளங்கியது. அந்த நூற்றாண்டின் மகத்தான இந்தியராக, எக்காலத்தும் சிவபெருமானின் மறு அவதாரம் என ஹிந்துக்களால் போற்றி வழிபடப் பெறும் ஒரு மகான் தென் இந்தியாவில், மலையாள நாட்டின் ஒரு பகுதியான காலடியில் அவதரித்தார். அத்வைத வேதாந்தத் தத்துவத்தை மக்களுக்கு அருளிய சங்கராச்சாரியாரே அவர். உலகம் இதுவரை அறிந்துள்ள மிகச்சிறந்த தத்துவாசாரியாரும் தர்க்க சாஸ்திரியும் அவரே. அவர் இந்தியா முழுதும் யாத்திரை மேற்கொண்டு மக்களிடையே தம்முடைய தத்துவங்களையும் உபதேசங்களையும் எடுத்துரைத்தார். அவரது உபதேசங்களும் அவர் காட்டிய பாதையும் மக்கள் மனதில் நிறைந்து அவர்களுக்கு வழிகாட்டும் ஒளி விளக்கென மிளிர்ந்தன. அவரது வாக்கு வன்மையின் முன்நிற்கமுடியாது பௌத்தம் முடிவாக இந்தியாவிலிருந்து விடை பெற்றுச்

சென்றது. உலகம் முழுவதும் அவரது உபதேசங்கள் பெரு மதிப்பும் செல்வாக்கும் பெற்றன.

ஒன்பதாம் நூற்ருண்டில் வேறு பல அரசாட்சிகள் தோன்றின. மிஹிரபோஜன் கனேஜில் மிகச் சிறந்த மன்னனுகத் திகழ்ந்தான். (கி.பி. 840—கி.பி. 890). பஞ்சாபிலிருந்து வங்காளம் வரையிலும், ஹிமாலயப் பகுதிகளிலிருந்து மால்வா வரையிலும் அவனது அதிகாரம் பரவிக்கிடந்தது. விஷ்ணுவிடம்—அதுவும் குறிப்பாக அவரது வராக அவதாரத்தில்—அளவில்லா பக்திகொண்டு விளங்கினுன் மிஹிர போஜன். அதன் காரணமாக ஆதிவராகன் என்ற பட்டத்தையும் மேற்கொண்டான் அவன்.

அப்போது அரேபிய வியாபாரிகள் இந்தியாவுடன் பெருமளவில் வியாபாரத் தொடர்புகள் கொண்டிருந்தனர். மிஹிரபோஜன் அதை விரும்பவில்லை. கனேஜ் மன்னர்களுக்குப் போட்டியாகத் தட்சணத்தில் ராஷ்டிரகூடர்கள் விளங்கினுர்கள். புகழ்வாய்ந்த ராஷ்டிரகூட அரசனுன அமோகவர்மன் (கி. பி. 815—கி. பி. 877) அரேபிய வியாபாரிகளுக்குப் பெரும் ஊக்கம் அளித்து வந்தான். மற்றும் திகம்பரஜைனர்களும் அவனது ஆதரவைப் பெற்றிருந்தனர்.

பழம்பெரும் சோழ பரம்பரையில் வந்த விஜயாலயன் கி. பி. 850-ல் தஞ்சையைக் கைப்பற்றி அதன் மன்னன் ஆனுன். அவனது மகன் ஆதித்த சோழனது காலத்தில் சோழ ராஜ்யத்தின் எல்லைகள் மேலும் விரிவடைந்தன. காஞ்சி பல்லவர்களின் மீது படையெடுத்து வென்று தெற்கே பல்லவ ஆட்சிக்கு முற்றுப்புள்ளிவைத்தான் ஆதித்தன். பாண்டியர்களும் அவனுக்கு அடிபணிந்தார்கள். சேரர்களோ அவனுக்கு நெருங்கிய நண்பர்களாயினர். கி. பி. 900—க்கு முன்னர் சோழ வம்சம் தஞ்சையில் ஸ்திரமாக ஸ்தாபிக்கப்பட்டது. அதன் பின்னர் சுமார் இரண்டு நூற்ருண்டுகளுக்கு அவர்களது அதிகாரம் யாராலும் அசைக்க முடியாத அளவு நிலைபெற்றுத் திகழ்ந்தது.

இந்தக் காலத்தில் பாக்தாதில் காலிப்புகள் ஆட்சிபுரிந்து வந்தனர். புகழ்பெற்ற ஹரூன் அல்ரஷீத் தன்னுடைய அரசவைக்கு அநேக பிராமண அறிஞர்களை வரவழைத்துப் பல சம்ஸ்கிருத நூல்களை பெர்ஷிய மொழியிலும் அரேபிய மொழியிலும் பெயர்த்து எழுதச் செய்தான். பஞ்ச தந்திரம் மற்றும் மருத்துவம், ரசாயணம், கணிதம், வான சாஸ்திரம், ஜோதிடம் போன்ற பலதுறை நூல்களும் மொழிபெயர்க்கப் பட்டன. இவ்வாறு மொழி பெயர்க்கப்பட்ட இந்திய அறிவுச் செல்வம் பின்னர் அரேபியர்கள் ஸ்பெயின், போர்ச்சுகல் ஆகியவற்றை வெற்றி கொண்டபோது ஐரோப்பாவுக்கும் கொண்டு செல்லப்பட்டது. அங்கு அவை லத்தீன் மொழியில் எழுதப்பட்டன. ஐரோப்பாவில் இலக்கிய மறுமலர்ச்சி பின்னர் தோன்றிட இவையும் ஒரு காரணமாக விளங்கின.

திபத்துக்கும் பல இந்திய நூல்கள் சென்றன. அநேகப் பிராமணப் பண்டிதர்கள் திபெத்துக்குச் சென்று சமஸ்கிருத நூல்களைத் திபெத்திய மொழியில் பெயர்த்து எழுதினர்.

நீண்ட காலத்துக்கு முன்னரே ஜாவா, ஸயாம், மற்றும் இதர நாடுகளில் அறிமுகப்படுத்தப் பட்டிருந்த இந்தியக் கலாசாரம் இப்போது மேலும் வளர்ச்சியுற்றது. சிவனுக்கும், விஷ்ணுவுக்கும், துர்கைக்கும் அர்ப்பணிக்கப்பட்ட அநேகக் கோயில்கள் கட்டப்பட்டன.

இந்திய அறிஞர்கள் சீனவுக்குச் சென்று பௌத்த நூல்களைச் சீன மொழியில் பெயர்த்து எழுதினர்கள்.

# 9. பத்தாம் நூற்றாண்டு

பத்தாம் நூற்றாண்டில், இந்தியாவின் மிகச் சக்தி வாய்ந்த மன்னர்களாகத் தஞ்சைச் சோழர்கள் விளங்கினர்கள். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆதித்தனின் மகனான பராந்தக சோழன் பாண்டிய நாட்டை வென்று,

இலங்கைக்கு படையெடுத்துச் சென்று வெற்றி வாகை சூடினன்.

பராந்தக சோழனின் காலத்தில் தமிழ் நாட்டில் ஆட்சி முறை மிகச் சிறந்து விளங்கியது. பாரபட்சமற்ற முடிவு களுக்குப் பின்னரே வரிகள் விதிக்கப்பட்டன. தர்ம சாஸ் திரங்களின் அடிப்படையில் குற்றவாளிகள் தண்டிக்கப் பட்ட னர். சிறிய கிராமங்கள், பெரிய கிராமங்கள், நகரங்கள் ஆகியவைகள் தனித் தனிக் கூட்டமைப்பில் பிராந்திய சபாக்களால் நிர்வகிக்கப்பட்டன. பல வகையான சபாக் கள் நிறுவப்பட்டன. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு குறிப் பிட்ட அரசாங்கப் பணிக்குப் பொறுப்பாக இருந்தன. கோயில்கள் பிரத்தியேக சபாக்களின் நிர்வாகத்தில் இருந்தன. சபாக்களின் அங்கத்தினர்கள் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டனர். பிராந்தியத் தேவைகளையும், வழக்குகளையும், சாலையமைப்பு - அவற்றைச் செப்பனிடுதல் போன்ற பணிகளையும் இந்தச் சபாக்கள் ஏற்று நடத்தின. அந்தந்தப் பிராந்தியங்களின் பாதுகாப்பு, பாசன வசதி களும் அவற்றின் மேற் பார்வையில் இயங்கின. வரிகளையும், அரசனுக்கு மக்களால் அளிக்கப்பட்ட இதர காணிக்கைகளை யும் அவை வசூலித்தன. சோழ மன்னர்களின் ஆட்சியில் மக்களின் வாழ்க்கை இன்பம் நிறைந்து விளங்கியது.

பல்லவர்களின் காலம் வரை தமிழ் நாட்டுக் கோயில்கள் மரத்தினாலும் செங்கல்லினாலுமே கட்டப்பட்டு வந்தன. இப் போது தஞ்சைச் சோழர்கள் பழங் காலத்திய கோயில்களை முறையாகக் கற்களைக் கொண்டு மாற்றிக் கட்டலானார்கள். பராந்தக சோழனும் அவனது பட்டத்தரசியும் அநேகக் கோயில்களை இத்தகைய மாறுதலுக்கு உட்படுத்தினார்கள். அவர்கள் கட்டுவித்த கோயில்கள் அளவில் சிறியவையாக இருந்தன. அவை ஒரு கர்ப்பக் கிரகமும் ஒரு வெளி மண்டப மும் கொண்டு விளங்கின.

சோழ மன்னர்கள் கோயில்களின் நிர்வாகத்துக் கென நிலங்களை நன் கொடையாக அளித்தார்கள். கவிஞர்கள்

அவர்களது ஆதரவைப் பெற்றிருந்தனர். அநேகமாக இக் காலத்தில் தான் கவிச் சக்ரவர்த்தி கம்பரும் வாழ்ந்தார் என்று கூறலாம்.

பத்தாம் நூற்றூண்டில் திருவரங்கத்தில் நாதமுனி என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் வைஷ்ணவத் துதிப் பாடல்களை ஒன்று சேர்த்து நாலாயிரம் செய்யுள்கள் கொண்ட பிரபந்தமாக உருவாக்கினுர். தென் இந்திய வைஷ்ணவர்கள் அதைத் தங்களுடைய தமிழ் வேதமாகக் கொண்டார்கள்.

பத்தாம் நூற்றுண்டின் முடிவுப் பகுதியில் ராஜ ராஜ சோழன் சக்ரவர்த்தியானுன். கிருஷ்ணுவுக்குத் தெற்கே இருந்த பிரதேசங்கள் அனைத்தையும் தன் ஆட்சியின் கீழ் கொண்டு வந்தான். இதற்காகத் தரையிலும் கடலிலும் அவன் அநேகப் போர்களை மேற் கொள்ள வேண்டியிருந்தது. தஞ்சையை ஒரு பெரும் நகரமாகக் கட்டுவித்தவனும் அவனே. அவனுடைய காலத்தில் இந்தியாவின் மிகவும் புகழ் வாய்ந்த நகரமாக அது விளங்கியது.

மிகப் பெரிய அளவில் தஞ்சை பிரகதீஸ்வரர் ஆலயத்தை ராஜ ராஜன் கட்டுவித்தான். அதில் அநேக அழகிய சிற்ப வேலைப் பாடுகளைச் செய்வித்தான். கோயிலின் முன்னே ஒரு சிறிய நுழை கோபுரத்தையும் அவன் கட்டினுன். அத்தகைய நுழைவாயில் அப்போதே இந்தியாவில் முதன் முதலாக அமைக்கப்பட்டது. கோயிலில் மூர்த்திக்கு அநேக விலை உயர்ந்த ஆபரணங்களையும், கோயிலின் நிர்வாகத்துக்கெனப் பெருமளவு நிலங்களையும் அவன் நன்கொடையாக அளித்தான்.

ராஜ ராஜனின் பரந்த சாம்ராஜ்யம் சரிவர அளவிடப் பட்டு, நிலங்கள் அவற்றின் விளைச்சலுக் கேற்பப் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டன. அவற்றின் மீது நியாயமான வரிகளே விதிக்கப்பட்டன. அவனுடைய காலத்தில் சைவத் துதிப் பாடல்கள் ஒன்று திரட்டப்பட்டு திருமுறை என்ற

பெயரில் தமிழகத்து சைவர்களின் தமிழ் வேதமாக உருப் பெற்றன.

இந்தக் காலத்தில் கிருஷ்ணுவுக்கு வடக்கே இருந்த பகுதிகள் துரதிர்ஷ்டம் நிரம்பி விளங்கின. புதிதாகத் தோன்றிய கல்யாணி சாளுக்கிய வம்சம் ராஷ்டிர கூடர் களின் அதிகாரத்தை நிர் மூலமாக்கியது. வாதாபி சாளுக்கிய பரம்பரையில் தோன்றிய தைலபனுல் கல்யாணி சாளுக்கிய பரம்பரை கி. பி. 973-ல் தோற்றுவிக்கப் பட்டது. மால்வா மன்னர்களுடனும் தஞ்சைச் சோழர்களுடனும் கல்யாணி சாளுக்கியர்கள் எப்போதும் போரிட்டு வந்தனர்.

பத்தாம் நூற்றுண்டின் முடிவுக் காலத்தில் முஞ்சன், மால்வாவில் ஆட்சி புரிந்து வந்தான். அவன் சிறந்த அறி வாளியாகவும், அறிஞர்களுக்குப் பேராதரவு அளிப்பவனுக வும் விளங்கினுன். அவன் தைலபனுடன் பதினேழு முறை போரிட்டான். கடைசியில் போரில் முஞ்சன் கைது செய்யப் பட்டு மரண தண்டனை விதிக்கப்பட்டான் (கி. பி. 995).

தைலபனின் மகன் சத்யாஸ்வரன் ஆட்சிக்கு வந்தபோது அவனது எல்லேக்குள் ராஜ ராஜன் படையெடுத்துச் சென்று, சாளுக்கியர்களுக்கும் சோழர்களுக்குமிடையே ஒரு நிரந்தர மான விரோதத்தைத் தோற்று வித்தான். அது சுமார் எழுபது ஆண்டுகளுக்கு நீடித்தது.

இந்த நூற்றுண்டில் முஞ்சனைத் தவிர வேறு பல ராஜ புத்திர அரசர்களும் ஆட்சி புரிந்து வந்தனர். பாலர்களும் சேனர்களும் வங்காளத்தையும் பீஹாரையும் ஆண்டு வந்தனர். சாளுக்கியரைச் சேர்ந்த ஸோலங்கிகள் குஜராத் தில் தங்களே ஸ்தாபித்துக் கொண்டார்கள். காஷ்மீரத்தில் தொடர்ந்து ஆண்டு வந்த கொடுங்கோலர்களான மன்னர் களால் அந்நாட்டு மக்கள் பெரும் அடக்கு முறைக்கு உள்ளானுர்கள். யசோவர்மனின் மகனுன தங்கன் கஜுராஹோவில் மிக அழகிய கோயில்களைக் கட்டினுன். சலவைக் கற்களினுல் ஆன இக்கோயில்கள் மிகச் சிறந்த

சிற்பங்களால் அலங்கரிக்கப்பட்டன. சிந்துவுக்கு வடக்கே, ஆப்கனிஸ்தானம் வரை பரந்திருந்த பெரும் நிலப்பரப்பு ஜெயபாலனின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. இவர்களும், சிறு சிறு பகுதிகளாகப் பல வட இந்தியப் பிரதேசங்களை ஆண்டு வந்த இதர ராஜபுத்திரர்களும் மிகவும் தற்பெருமையும் கர்வமும் கொண்டவர்களாக விளங்கினர்கள். எனவே அவர்கள் எப்போதும் தங்களுக்கிடையே ஒருவருக்கொருவர் சச்சரவிட்ட வண்ணம் இருந்தனர்.

பத்தாம் நூற்றுண்டின் முடிவில் ஆப்கனிஸ்தானத்தில்—கஜினியில் ஒரு புதிய ஆட்சி ஏற்பட்டது. பாக்தாதின் காலீப்புக்களால் இப் பிரதேசம் கைப்பற்றப்பட்டிருந்தது. ஆனல் காலீப்புக்களின் சாம்ராஜ்யம் சிறு சிறு சுதந்திர நாடுகளாகப் பிளவுபட்டது. அப்போது கஜினியின் அமீராக ஸபக்டஜின் அதிகாரத்துக்கு வந்தான். அவன் கி.பி.986ல் இந்தியாவின்மீது படையெடுத்து ஜெயபாலனுடன் பலமுறை போர்களில் ஈடுபட்டான். கி.பி. 991ல் ஜெயபாலன் சில ஹிந்து மன்னர்களைக் கூட்டாகச் சேர்த்துக் கொண்டு ஸபக்டஜினைத் தாக்கினன். ஆனல் குர்ரம் சமவெளியில் இந்தக் கூட்டணி தோற்கடிக்கப்பட்டது. பெஷாவர் முகம்மதிய ஆட்சியின் கீழ் வந்தது.

# 10, பதினோராம் நூற்றுண்டு

கி. பி. 997-ல் ஸபக்டஜினுடைய மகன் மஹமது அமீர் பதவி ஏற்று சுல்தான் என்ற பட்டத்தையும் கொண்டான். வடஇந்தியாவின் செல்வம் மிக்க அரண்மனைகளையும் கோயில்களையும் கொள்ளையடிக்கவேண்டும் என்பது அவனது விருப்பமாக இருந்தது. அவன் இந்தியாவின்மீது பதினேழு முறைகள்

படையெடுத்தான். அநேகமாக ஒவ்வொரு முறையும் ஹிந்து மன்னர்களைப் போரில் வெற்றி கொண்டான். இந்திய மன்னர்கள் வீரம் மிக்க ராஜபுத்திரர்களாகவே இருந்தார்கள். ஆயினும் மஹமது போர்த் தந்திரங்களில் சிறந்தவனாக இருந்தான். எதிரியை சாமர்த்தியமாக ஏமாற்றி போர்க்களத்தில் தோல்வியுறச் செய்யும் வல்லமை அவனிடம் நிரம்பியிருந்தது.

ராஜபுத்திர மன்னர்கள் அவனைத் தனித் தனியாகவே எதிர்த்தனர். ஓரிரு சமயங்களில் அவர்கள் கூட்டணியாக ஒன்று சேர்ந்தும் போரிட்டனர். ஆனால் மஹமது அப்போதும் அவர்களைப் போரில் தோல்வியுறச் செய்தான். கி.பி. 1001-ல் அவன் ஜெயபாலனை வெற்றி கொண்டான். அந்த அவமானம் தாங்காது ஜெயபாலன் தனக்குத் தானே நெருப்பிட்டுச் சாம்பலானான். கி.பி. 1009-ல் மஹமது பீம நகர் கோட்டையைத் தாக்கி அங்கிருந்த அபரிமிதமான தங்கம், விலை உயர்ந்த வைரங்கள் ஆகியவற்றைத் தனதாக்கிக் கொண்டான். கி.பி. 1018—1019-ல் கனோஜ், மதுரா ஆகிய ராஜ நகரங்களின் செல்வம் மிக்கக் கோயில்களையும் கொள்ளையிட்டான் மஹமது.

குஜராத்தின் கடற்கரைப் பகுதியிலிருந்த சோமனாத் ஆலயத்தை மஹமது தாக்கிச் சிதைத்தது பிரசித்தி பெற்ற சம்பவமாகும். கோயில் வெகு தீரத்துடன் தீவிரமாகப் பாதுகாக்கப்பட்டது. அதைக் காப்பாற்றும் முயற்சியில் சுமார் ஐம்பதினாயிரம் பேர் போரிட்டு உயிரிழந்தனர். கோயிலைக் கைப்பற்றிய மஹமது அதன் லிங்கத்தைக் உடைத்து ஏராளமான செல்வத்தைக் கொள்ளையிட்டான். இந்தச் செல்வம் அனைத்தையும் கஜினியில் அழகிய கட்டிடங்கள் கட்டப் பயன்படுத்தினான். அநேக அரேபிய—பெர்ஷிய அறிஞர்களை அங்கு வரவழைத்து, பதினோராம் நூற்றாண்டின் புகழ்மிக்க நகரமாக கஜினியை உருவாக்கினான் மஹமது.

மஹமதின் இடைவிடாத படையெடுப்புக்கள் இந்தியாவின் சரித்திரத்தில் எந்த விதமான திருப்பத்தையும் தோற்றுவிக்கவில்லை. மக்கள் வழக்கம் போலவே வாழ்ந்து வந்தனர். அவர்கள் கல்வி பயில்வதிலும், நூல்கள் எழுதுவதிலும் எப்போதும் போலவே ஈடுபட்டிருந்தனர். மன்னர்கள் கோயில்கள் கட்டும் பணியைத் தொடர்ந்து செய்து வந்தார்கள்.

இந்தக் காலத்தில் அநேக அறிஞர்கள் காஷ்மீரத்தில் வாழ்ந்து வந்தனர். அவர்கள் எண்ணிக்கையில் மிகுந்த, சிறப்பு மிக்க சம்ஸ்கிருத நூல்களைப் படித்தார்கள். அவர்களுள் தலை சிறந்தவராக அபிநவ குப்தர் விளங்கினார். சைவ சமயத்தின் ஒரு பிரிவு காஷ்மீரத்தில் மிகுந்த செல்வாக்குப் பெற்றது. அதன் தத்துவங்களை எடுத்துச் சொல்லி விளக்கம் தருவதில் தலை சிறந்த ஆசானாக அபிநவ குப்தர் விளங்கினார்.

காஷ்மீரத்தின் வரலாற்றை 'ராஜதரங்கினி' என்ற பெயரில் சம்ஸ்கிருதக் கவிதை நூலாக கல்ஹணர் இயற்றினார். காஷ்மீர அறிஞர்களில் பலர் வேறு ராஜ்யங்களுக்குக் குடியேறினார்கள். அவர்களுள் சிறந்தவராக விளங்கியவர் ஆறும் விக்கிரமாதித்யனின் வாழ்க்கைச் சரிதையை எழுதிய பில்ஹணர்.

முஞ்சனுக்குப் பின்னர் போஜராஜன் ஆட்சிக்கு வந்தான். அவன் அறிஞர்களுக்கிடையே அரசனாகவும், அரசர்களுக்கிடையே அறிஞனாகவும் விளங்கினான். அவன் அநேக சம்ஸ்கிருத நூல்களை இயற்றினான். தன்னுடைய அரசவையில் எல்லா சிறந்த அறிவாளிகளையும் ஒன்று சேர்த்தான். அவர்களுக்குப் பரிசுப் பொருள்களை அள்ளி அள்ளிக் கொடுத்தே பல சமயங்களில் அவனது கஜானா வெறுமை ஆயிற்று. அவன் தனது தலைநகரில் ஒரு பல்கலைக் கழகத்தைத் தோற்றுவித்தான். அநேகக் கோயில்களையும் கட்டுவித்தான். இரு மலைகளுக்கிடையே இரண்டு பெரும்

அணைக்கட்டுக்களைக் கட்டி மாபெரும் போஜ்பூர் ஏரியை உருவாக்கியது அவனது மகத்தான சாதனையாகும். ஆங்காங்கே சிறு சிறு தீவுகளையும், 250 மைல் நீர்பரப்பையும் கொண்டு போஜ்பூர் ஏரி பார்ப்பவர் மனத்தில் பிரமிப்பைத் தோற்றுவிக்கும் படியாக விளங்கியது.

போஜராஜன் தன் வாழ்நாள் முழுதும் (கி.பி. 1018-கி. பி. 1060) கல்யாணிசாளுக்கியருடனும், குஜராத்தின் ஸோலங்கிகளுடனும், சேடியின் காலசூரிகளுடனும் போரிட வேண்டியிருந்தது. அவனது மரணத்துக்குப் பின்னர் அவனுடைய தலைநகரம் குஜராத்தின் பீமதேவனுலும், சேடியின் கர்ணதேவனுலும் கொள்ளையிடப்பட்டது.

போஜனுடைய ராஜ்யத்துக்குத் தெற்கே கல்யாணி சாளுக்கியர்கள் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்கள் எப்போதும் தஞ்சைச் சோழர்களுடன் தொடர்ந்து போரில் ஈடுபட்டு வந்தனர். துங்கபத்திரா, கிருஷ்ண ஆகிய நதி தீரங்களை யொட்டி அநேகப் போர்கள் நிகழ்ந்தன. ஆயினும், இதர இந்திய மன்னர்களைப் போலவே சாளுக்கியர்களும் அநேக அழகிய கோயில்களைக் கட்டினர். சாளுக்கியர் கோயில்கள் சிற்ப வேலைப்பாட்டில் சிறந்து விளங்கின. தங்க ஆபரணங்களில் செய்யப்படுவதை விட அதிக நுணுக்கமான வேலைப்பாடுகளை உடையவையாக அக்கோயில்கள் விளங்கின.

சாளுக்கியரை மூர்த்தண்யமாக எதிர்த்தவன் ராஜராஜ சோழனின் மகனுன ராஜேந்திரன். அவன் சிறந்த போர் வீரன். ராஜேந்திரன் பர்மாவுக்கும், வட இந்தியாவுக்கும் தனது ராணுவத்தை வெற்றிகரமாக நடத்திச் சென்றுன். கங்கைக் கரைவரையில் அவனது படையெடுப்பு நிகழ்ந்தது. எனவே அவன் 'கங்கைகொண்ட சோழன்' என்ற சிறப்புப் பெயரையும் பெற்றுன். கொள்ளிடத்தின் கரையில் 'கங்கை கொண்ட சோழபுரம்' என்ற நகரத்தைக் கட்டுவித்து அதை தனது தலைநகரமாகக் கொண்டான் ராஜேந்திரன். அழகிய

அரண்மனையையும், ராஜராஜன் தஞ்சையில் கட்டுவித்ததை போன்ற பெரும் கோயில் ஒன்றையும் அவன் அங்கு நிர்மாணித்தான்.

ராஜேந்திரனுக்குப் பின்னர் ஆட்சிக்கு வந்தவர்களும் சாளுக்கியர்களுடன் தொடர்ந்து போரிட்டனர்.

பதினேராம் நூற்றுண்டில் மகத்தான மதாசாரியார் ஒருவர் வாழ்ந்தார். சென்னைக்கு அருகாமையில் உள்ள ஸ்ரீபெரும்புதூரில் அவதரித்த ஸ்ரீராமானுஜரே அவர். அவரது வாழ்க்கையின் பெரும் பகுதி திருவரங்கத்திலேயே கழிந்தது. பழம் பெரும் சம்ஸ்கிருத நூல்களைப் படித்தறியவும், தாம் ஸ்தாபித்த மார்க்கமான விசிஷ்டாத்வைத வேதாந்தத்தை மக்களுக்கு உபதேசிக்கவும் அவர் பாரதமுழுதும் யாத்திரை மேற் கொண்டார். பின்னர் சோழ மன்னனின் கொடுமைக்காளாகி ஸ்ரீ ராமானுஜர் மைசூருக்குச் சென்று விட நேர்ந்தது.

# 11. பன்னிரண்டாம் நூற்றுண்டு

பன்னிரண்டாம் நூற்றுண்டில் சோழ மன்னர்கள் கங்கை கொண்ட சோழபுரத்தை தொடர்ந்து ஆண்டு வந்தனர். தமிழ்க் கவிஞர்களுக்கும், கோயில்களைத் திரும்பக் கட்டுவதற்கும் அவர்கள் தங்கள் ஆதரவை அளித்துவந்தனர். ஆனல் சாளுக்கிய அரசு சிறு சிறு சுதந்திர ராஜ்யங்களாக உடைந்து சிதறியது. அவற்றுள் விஷ்ணுவர்த்தனன் தோற்றுவித்த ஹொய்சால அரசு முக்கியத்துவம் பெற்று விளங்கியது.

முதல் ஹொய்சால மன்னனை விஷ்ணுவர்த்தனன் ஆரும் விக்கிரமாதித்தியனின் ராஜப் பிரதிநிதியாக இருந்த

வன். தலக்காடைச் சேர்ந்த கங்க வம்சத்தை அழித்துச் சுதந்திர மன்னன் ஆனவன் அவன். மைசூரில் துவார சமுத்திரம் அவனது தலைநகராக இருந்தது. ஸ்ரீராமானுஜர் மைசூருக்குப் போய்விட நேர்ந்தபோது விஷ்ணுவர்த்தனன், அவரைப் பெரும் மரியாதையுடன் வரவேற்று, அவருடைய சீடனானான். அவருக்காக அநேக விஷ்ணு கோயில்களையும் அவன் கட்டுவித்தான்.

ஹொய்சாலர்களுக்குள் மிகச் சிறந்த மன்னனாக விளங்கியவன் வீரபெல்லாலன் (கி.பி. 1172-கி.பி. 1210). தன் ராஜ்ய எல்லைகளைச் சுற்றியிருந்த சிற்றரசுகள் அனைத்தையும் அவன் வெற்றி கொண்டான். அவனது காலத்திற்குப் பின்னர் ஹொய்சால வம்சம் க்ஷீணித்தது.

ஹொய்சாலர்கள் கட்டிய கோயில்கள் சாளுக்கிய பாணியைப் பின்பற்றியே அமைந்திருந்தன. அவர்கள் கட்டிய கட்டிடங்கள் சாளுக்கியர் கட்டியவற்றைக் காட்டிலும் நுணுக்கமான வேலைப்பாடுகளில் சிறந்து விளங்கின.

விக்கிரமாதித்தியனின் மற்றொரு ராஜப்பிரதிநிதியான பிஜ்ஜாலன் தன்னைச் சுதந்திர மன்னனாகப் பிரகடனப் படுத்திக்கொண்டான். அவனுடைய மந்திரியான பஸவா, வீரசைவ அல்லது லிங்காயத மார்க்கத்தைத் தோற்றுவித்தான். லிங்காயத்துக்கள் பெரும்பாலும் கன்னட நாட்டிலேயே வாழ்ந்து வந்தார்கள். அவர்களது நூல்கள் முக்கியமாகக் கன்னட மொழியில் எழுதப்பட்டன.

தென் இந்தியாவில் மக்கள் இத்தகைய மத இயக்கங்களில் ஈடுபட்டிருந்த போது வடஇந்திய ராஜபுத்திர மன்னர்கள் தங்களுக்குள்ளேயே தொடர்ந்த—முற்றுப்பெறாத போர்களில் ஈடுபட்டிருந்தனர்.

பன்னிரண்டாம் நூற்றாண்டின் மிகச் சிறந்த ராஜபுத்ர நாயகனாக ஆட்சி புரிந்தவன் தில்லி மன்னன் பிரிதிவிராஜன். அவன் துணிவு நிரம்பிய வீரனாகவும், இரக்கம் நிரம்பிட

எதிரியாகவும் விளங்கினான். அவனுக்கெதிராகப் போட்டியிட்டு நின்றவன் கனோஜின் ஜெயசந்திரன். இவ்விரு மன்னர்கள் ஒவ்வொருவரும் தன்னை மற்றவரைவிட மிக உயர்வானவராகவே கருதி வந்தனர். எனவே அவ்விருவருக்கிடையேயும் விரோதம் மிகுந்திருந்தது.

ஜெயசந்திரனின் மகள் சம்யுக்தையின் மீது பிரிதிவிராஜன் காதல் கொண்டான். தன் மகள் சம்யுக்தைக்குத் தகுந்த மணாளனைத் தேர்ந்தெடுக்க சுயம்வரம் ஒன்றை ஏற்பாடு செய்தான் ஜெயசந்திரன். அந்த வைபவத்துக்குப் பிரிதிவிராஜன் அழைக்கப்படவில்லை. அதற்கு மாறாக, பிரிதிவிராஜனைப் போன்றதொரு சிலைவடித்து அதை அரண்மனைவாயிலின் அருகாமையில் நிறுத்தி வைத்தான் ஜெயசந்திரன். சுயம்வர நிகழ்ச்சியின் போது சம்யுக்தை நேராக அந்தச் சிலையை நாடிச் சென்று மணமாலையை அதன் கழுத்தில் போட்டாள். அருகே பதுங்கியிருந்த பிரிதிவிராஜன் பாய்ந்துவந்து அவளைத் தூக்கியவனாகக் குதிரையில் தில்லியை நோக்கி விரைந்தான். அங்கு அவர்களது திருமணம் நடந்தேறியது. (கி.பி. 1175)

பிரிதிவிராஜன் சம்யுக்தையுடன் குதிரையில் ஏறி தில்லியை நோக்கி விரைந்தபோது குறுக்கிட்டவன் சன்டெல்ல மன்னன் பார்மால். பார்மால் பிரதிவிராஜனின் பணியாட்களைத் தாக்கி அவர்களைக் கொன்றான். எனவே பிரிதிவிராஜன் கி. பி. 1182-ல் பார்மாலின் ராஜ்யத்தின்மீது படையெடுத்து அவனது படையினரை சின்னாபின்னப்படுத்தினான். அப்போது வெற்றிகொண்ட பிரிதிவிராஜனிடம் பார்மால் கோரியது—ஒரு மாதப்போர் நிறுத்தம், புதிய ராணுவம் ஒன்றைத் தோற்றுவிக்கப் போதிய அவகாசம். ஒரு மாதம் மட்டும் இன்றி மேலும் ஏழு நாட்கள் போர் ஓய்வு அளித்துப் பின்னர் பார்மாலின் புதிய ராணுவத்தையும் தோல்வியுறச் செய்தான் பிரிதிவிராஜன். அடுத்து தன் தந்தையின் விரோதியான குஜராத்தின் பீமதேவனுடன் போரிட்டு அவனையும் வென்றான்.

கி. பி. 1173-ல் மஹமது ஷிஹாப்புத்தின் தன் சகோதரனை கோர் சுல்தான் கியாஸுத்தினின் உதவியுடன் கஜினியின் சிம்மாதனத்தைக் கைப்பற்றினன். ஷிஹாப்புத்தின், பொதுவாக அழைக்கப்பட்டுவந்தது மஹமது கோரி என்ற பெயரால். பதவியேற்றபோது அவன் கொண்ட பெயர் மூயிஸுத்தின். கி. பி. 1186-ம் ஆண்டு முடிவடையு முன்னர் அவன் மூல்டானையும், லாகூரையும் தனது ராஜ்யத்தினுள் இணைத்தான். கி. பி. 1191-ல் அவன் பிரிதிவிராஜனின் எல்லையை ஊடுருவி, அவனது நாட்டிற்குள் படையெடுத்துச் சென்று தாக்கினன். தானேசுவரத்துக்கருகில் இருதரப்புப் படையினரும் மோதினர்கள். ராஜபுத்திரர்களின் வீரத்துக் கெதிராக நிற்க முடியாது முகமதிய ராணுவம் தோற்று ஓடியது. எஞ்சியவர்கள் அடியோடு அழிக்கப்பட்டனர்.

ஓராண்டுக்குப் பின்னர் கோரி மீண்டும் படையெடுத்தான். உடன் சமாதானம் பேசிப் பிரிதிவிராஜனின் கவனத்தை வேறு திசையில் திருப்பி, அவன் அஜாக்கிரதையாக இருந்த நேரத்தில் அவனது படையினரைத் தாக்கி அழித்தான்.

ராஜபுத்திர வீரனை பிரிதிவிராஜன் போர்க்களத்திலேயே மரணம் அடைந்தான்.

மூயிஸுத்தின் இந்தியாவில் தொடர்ந்து தங்கவில்லை. தனது தளகர்த்தனை குத்புதினை பின்னேவிட்டு அவன் கஜினிக்குத் திரும்பிவிட்டான். குத்புதின் தில்லியைக் கைப்பற்ற, அது முகமதிய மன்னர்களின் தலைநகரம் ஆயிற்று. குத்புதின் ஜெயசந்திரனைப் போரில் வென்று, பின்னர் பனரஸ் வரையில் உள்ள பிரதேசங்களைக் கொள்ளையிட்டான். காசியின் மிகப் பழமையான கோயில்கள் குத்புதினல் அழிக்கப்பட்டன.

குத்புதினின் தளபதிகளுள் ஒருவனை மஹமது பக்தியார் கால்ஜி பீஹாரின்மீது படையெடுத்து கி. பி. 1193-ல் அங்கிருந்த ஹிந்து ஆட்சியை அழித்தான். பீஹாரின்

அநேக பௌத்த மடாலயங்கள் அவனால் நாசமாக்கப் பட்டன. அநேக பௌத்த பிட்சுக்களும் கொல்லப்பட்டனர். குவாலியர், குஜராத் ஆகியவை அடுத்து கைப்பற்றப் பட்டன. கி. பி. 1206-ல் விந்திய மலைக்கு வடக்கே இருந்த பிரதேசங்கள் அனைத்தும் இஸ்லாமியக் கொடியின் கீழ் வந்தன.

# 12. பதின்மூன்றும் நூற்றாண்டு

இந்தியாவில் முதன்முறையாக இரண்டு வகையான ஆட்சிகள் பதின்மூன்றும் நூற்றாண்டில் காணப்பட்டன. ஒன்று முகமதிய சுல்தான்களின் ஆட்சி; மற்றது ஹிந்து மன்னர்களின் ஆட்சி.

சோடகங்கர்கள் ஓரிஸ்ஸாவில் தொடர்ந்து ஆட்சி புரிந்து வந்தனர். ஆனால் அவர்கள் நிரந்தரமாக வங்காளத்தின் இஸ்லாமிய ஆட்சியாளர்களுடன் போரிடவேண்டியிருந்தது. சோடகங்கர்களின் மிகச் சிறந்த மன்னனாக விளங்கியவன் நரஸிம்மதேவன் (கி. பி. 1236—கி. பி. 1268). ஜாஜ்நகர் அவனது தலைநகராக இருந்தது. வங்காளத்தின் வைசிரா யாக இருந்த துக்ரில் இது கன்கானை, நரஸிம்மதேவன் மகா நதிக் கருகாமையில் போரில் வென்றான்.

பிரசித்தி பெற்ற கொனார்க்கா கோயிலை பூரிக்கு இருபது மைல் வடக்கே அவன் கட்டுவித்தான். பெருமளவில் அழகிய சிற்பவேலைப்பாடுகளை எவ்வாறு செய்யவேண்டும் என்பதற்கு அக்கோயில் ஒரு சிறந்த உதாரணம் ஆகும். அரசாங்கத்தின் பன்னிரண்டு ஆண்டு வருமானம் அக்கோயில் நிர்மாணிக்க செலவிடப்பட்டது. அதன் ஜகன்மோகன பிராகாரம் மூவாயிரம் அடி நீளத்தில் சிற்ப விசித்திரங்கள்

நிரம்பியுள்ளது. ஊர்வலங்கள், வேட்டை காட்சிகள், போர்க் காட்சிகள், மற்றும் மக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் போன்ற பலவற்றை அச்சிற்ப வேலைப்பாடுகள் விவரிக்கின்றன. அதன் மண்டபத்தின் உயரம் 128 அடி; கலசத்தின் விட்டம் 10 அடி; மத்தியில் உள்ள சன்னிதி 50 கெஜம்-உயரமுள்ள கருப்புக் கல்லால் ஆனது.

சாளுக்கியருக்குப் பின், தட்சிணத்தில் யாதவர்கள் ஆட்சிக்கு வந்தனர் ஸூனதேசம் என அவர்கள் ஆட்சி புரிந்த பிரதேசம் அழைக்கப்பட்டது. பின்னர் அதற்கு இடப்பட்ட பெயர்! காந்தேஷ். யாதவ வழியில் சிங்கண்ணு (கி. பி. 1210—கி. பி. 1237) மிகச் சிறந்த மன்னனாகத் திகழ்ந்தான். தேவகிரி அவனது தலைநகராக இருந்தது. யாதவர்களின் அரசவையில் பல அறிஞர்கள் குழுமியிருந்தனர். தர்ம சாஸ்திரம் எழுதிய ஹேமாத்ரியும் கணித விற்பன்னரான பாஸ்கராவும் அவர்களுள் முன்னணியில் திகழ்ந்தவர்கள். யாதவர்களின் காலத்தில் பண்டரிபுரத்து கிருஷ்ணன் கோயில் விஷ்ணு வழிபாட்டின் முக்கிய பக்திக் கேந்திரமாக விளங்கியது. பக்தர்கள் ஜாதிவேறுபாடின்றி பண்டரிபுரத்தில் குழுமினர். பகவான் கிருஷ்ணனைக் குறித்துப் பாடியும் ஆடியும் போற்றிப் புகழ்ந்தனர்.

தெலுங்கானுவில் காகதியர்கள் ஆட்சி புரிந்து வந்தார்கள். கிருஷ்ணுவுக்கும் கோதாவரிக்கும் இடையே அமைந்திருந்த இந்தப் பிரதேசத்துக்கு வாரங்கல் தலைநகராக இருந்தது. பிரதாப ருத்ர தேவன் அவர்கள் வழியில் வந்த மாமன்னன். வாரங்கலில் ஹனும கொண்டா என்னும் இடத்தில் ஆயிரம் தூண்கள் கொண்ட கோயில் ஒன்றை அவன் நிர்மாணித்தான். அவனுக்குப் பின் அவன் வழியில் தோன்றியவர்கள் கணபதிகள் என அழைக்கப் பட்டனர். தெலங்கானு வைரச் சுரங்கங்கள் நிறைந்த இடமாக இருந்தது. சிலந்தி வலை போன்ற மெல்லிய மஸ்லின் துணிகள் அங்கு நெய்யப் பட்டன.

தமிழ் நாட்டில் சோழர்களின் அதிகாரம் குறையலாயிற்று. இருப்பினும் அவர்களது கோயில் நிர்மாணப் பணி தொடர்ந்து நடந்தது. பாண்டியர்களின் செல்வாக்கு பன்மடங்கு பெருகத் தொடங்கியது. மிகச் சிறந்த பாண்டிய மன்னனுக சமுத்திர பாண்டிய சக்கரவர்த்தி (கி. பி. 1257—கி. பி. 1277) நெல்லூர் முதல் குமரிவரை ஆட்சி புரிந்தான். பழம் பெரும் கோயில்களை அவன் செப்பனிட்டுத் திரும்பக் கட்டினன். அவனது தலைநகரான மதுரையில் அநேக முஸ்லீம் வியாபாரிகள் குடியேறினர்கள். அவர்கள் பாண்டியர்களுக்காக அநேகக் குதிரைகளைப் பெர்ஷியாவிலிருந்து வரவழைத்து விற்பனை செய்தார்கள். சேரர்களுடைய அதிகாரம் மீண்டும் செல்வாக்குப் பெற்றது. மலையாளம் ஆட்சி மொழியாக ஆக்கப்பட்டது. மலையாள இலக்கியமும் தோன்றியது.

கி.பி. 1199-ல் இந்தியாவின் மூன்ருவது மகத்தான மதாசாரியார் கன்னட நாட்டில், உடுப்பியில் அவதரித்தார். த்வைத வேதாந்தத்தை உபதேசித்த ஆநந்த தீர்த்தரே அவர். சங்கரரைப் போன்றும் ராமானுஜரைப் போன்றும் ஆநந்த தீர்த்தரும் அநேக நூல்களை இயற்றினர். ராமானுஜர், ஆநந்த தீர்த்தர் ஆகியவர்களுடைய காலத்துக்குப் பின்னர் இந்தியாவில் விஷ்ணு வழிபாடு பெரிதும் செல்வாக்குப் பெற்றது.

விந்திய மலைக்கு வடக்கே ஒருவருக்குப் பின் ஒருவராகப் பல சுல்தான்கள் வரிசையாக ஆட்சிக்கு வந்தார்கள். குத்புதினுக்குப் பின் அல்டாமிஷ் சுல்தான் ஆனன். குத்புதின் தொடங்கிய குதுப்மினர் போன்ற பல கட்டடங்களைக் கட்டி முடித்தவனும் அவனே. அவற்றை நிர்மாணிக்க அநேக ஹிந்து தொழிலாளிகள் அமர்த்தப் பட்டனர். குதுப்மினரைக் கட்டி முடிக்க இருபத்தியேழு கோயில்களின் செல்வங்களும் பொருட்களும் பயன் படுத்தப்பட்டன.

சுல்தான் அல்டாமிஷுக்குப் பின் அவனது மகள் ரஸியா பேகம் ஆட்சிக்கு வந்தாள். அவளுக்கடுத்த

முக்கிய தில்லி சுல்தானாக விளங்கியவன் நாஸிருதின். அவனது காலத்தில் மத்திய ஆசியாவிலிருந்து மங்கோலியர் என்ற மஞ்சள் இனத்தவர் படையெடுத்து வந்து பஞ்சாபையும் வங்காளத்தையும் சூறையாடினார்கள். அவனுக்குப் பின் பால்பன் சுல்தான் ஆனான்.

தில்லியின் ஆரம்ப கால சுல்தான்கள் 'அடிமை வம்சத்தினர்' என்று அழைக்கப்பட்டனர். அவர்களுள் பெரும்பாலோர் சுல்தான்களுக்கும் ராணுவத் தலைவர்களுக்கும் அடிமைகளாக இருந்து, பின்னர் தங்களது வலிமையின் சிறப்பினால் மட்டுமே தில்லி சுல்தான் ஆனவர்கள். அவர்களது ஆட்சி கடுமை நிரம்பி விளங்கியது.

ராஜ புத்திர மன்னர்கள் சுல்தான்களின் அதிகாரத்தை எதிர்த்துப் புரட்சி செய்த போது கொடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். சுல்தான்கள் ராணுவ பலத்தின் துணை கொண்டு நாட்டை ஆண்டனர். பார்வைக்கு நாடு ஒரு ராணுவ முகாம் போலவே காட்சியளித்தது.

ஹிந்துக்கள் வெகுவாகக் கொடுமைப் படுத்தப்பட்டனர். அநேகர் இஸ்லாத்தைத் தழுவினர். கர்வம் நிரம்பிய ராஜ புத்திரர்கள் தங்கள் இருப்பிடமான கங்கை வெளியை விடுத்து ஆரவல்லி மலைகளின் பக்கம் குடியேறி புதிய சுதந்திர ஆட்சிகளை ஸ்தாபித்தார்கள். அப் பிரதேசம் பின்னர் ராஜபுதனம் என்று அழைக்கப்பட்டது. இப்பகுதியில் ராஜபுத்திரர்கள் ஒரு சில நூற்றாண்டுகளுக்கு சுதந்திர மன்னர்களாகவே விளங்கினார்கள்.

# 13. பதினான்காம் நூற்றாண்டு

கி பி 1294-ல் அலாவுதின் கில்ஜி தில்லி சுல்தான் ஆனான். சிறந்த போர் வீரனான அவன் ஏறக்குறைய இந்தியா முழுவதிலும் முஸ்லீம்களுடைய செல்வாக்கைப் பரப்பினான்.

அரச பதவி ஏற்பதற்கு முன்னரே தென் இந்தியாவுக்குப் படை திரட்டி வந்தான் அவன். மத்திய இந்தியாவின் பௌத்த மடாலயங்களைச் சூறையாடி ஸூன தேசத்தினுள் நுழைந்தான். தேவகிரியை முற்றுகையிட்டு யாதவ மன்னன் ராமசந்திரதேவனை அடி பணியச் செய்தான். அதன் விளைவாக ராமசந்திர தேவன் வருடம் தோறும் அலாவுதின் கில்ஜிக்குக் கப்பம் கட்டும்படி நேர்ந்தது.

அலாவுதின் சுல்தானகப் பதவியேற்ற பின்னரே மங்கோலியரின் வருகை தடைப் படுத்தப்பட்டது. அவனது ஆட்சி காலம் முழுதும் மங்கோலியரின் தொல்லைகளிலிருந்து நாடு விடுபட்டிருந்தது. குஜராத்தை வெற்றி கண்ட அலாவுதின் கில்ஜி அதன் ராணியும் மிகச் சிறந்த அழகியும் ஆன கமலா தேவியைத் தனது ராணியாக்கிக் கொண்டான். அவன் சித்தூரைக் கைப்பற்றியபோது, கோட்டையினுள் வாழ்ந்த பெண்கள் அனைவரும் தீக்குளித்தனர். ஆண்கள் அனைவரும் போரிட்டே உயிரிழந்தனர்.

அலாவுதினுக்கு முன்னர் ஆட்சி புரிந்த எந்த சுல்தானின் காலத்திலும் ஹிந்துக்கள் இவ்வளவு கொடுமைப் படுத்தப்பட்டது இல்லை. தனது தளபதியான மாலிக்காபூரை தெற்கே படைகளுடன் அனுப்பினுன் அலாவுதீன் கில்ஜி. கப்பம் கட்டத் தவறிய ராமசந்திரதேவனைத் தண்டித்து அவனிடமிருந்து கப்பம் பெற்றதோடு வாரங்கல் மன்னன் பிரதாபருத்ர தேவனையும் அடிபணியச் செய்து கப்பம் வசூலித்தான் மாலிக்காபூர். அடுத்து அவன் கவனம் தென்னுட்டின் மீது திரும்பியது. துவார சமுத்திரம் அழிந்து, ஹொய் சால ராஜ்யம் அடிமைப்படுத்தப்பட்டது. ஸ்ரீ ரங்கம் கோயில் கொள்ளையிடப் பட்டது. மதுரை, ராமேஸ்வரம் கோயில்கள் தரைமட்டமாயின. தென் இந்தியாவின் ஆட்சியைக் கவனிக்க மதுரையிலும் ஸ்ரீ ரங்கத்திலும் சுல்தான்களை நியமித்த மாலிக்காபூர் கி. பி. 1319-ல் தில்லிக்குத் திரும்பினுன்.

கட்டடங்கள் எழுப்புவதில் அலாவுதின் கில்ஜிக்கு மிகுந்த ஆர்வம் இருந்தது. அவன் புது தில்லியைக் கட்டுவித்தான். குதுப் வரிசையைச் சேர்ந்த பல மசூதிகளுக்கு மேலும் பல கட்டடங்களைச் சேர்த்தான். அலாவுதினுக்குக் கல்வியறிவு இல்லா விட்டாலும் அமீர்குஸ்ரூ போன்ற பல கவிஞர்கள் அவனது ஆதரவைப் பெற்றிருந்தனர்.

கி.பி. 1325-ல் மஹமது துக்ளக் தில்லியின் சக்கரவர்த்தி ஆனான். அவன் சிறந்த அறிவாளி; மிகுந்த பக்திமான். ஆனால் அவனுக்கு நிர்வாகத் திறன் இல்லாது இருந்தது. அவன் பதவியேற்பதற்கு முன்னர் தேவ கிரியிலும் வாரங்கவிலும் புரட்சி எழுந்தது. புரட்சியை அடக்கிய துக்ளக் தனது தலைநகரை தில்லியிலிருந்து தேவகிரிக்கு மாற்றினான். தேவகிரி தௌலதா பாத் என அழைக்கப்பட்டது. தேவகிரி இந்தியாவின் மத்தியக் கேந்திரமாக இருந்தது. எனவே இங்கிருந்து இந்தியா முழுவதும் தனது அதிகாரத்தை சரிவர செலுத்த முடியும் என்பது துக்ளக்கின் கருத்தாக இருந்தது.

வட மேற்கு எல்லை வழியாக மங்கோலியர் அலையலையாகப் படையெடுத்து வரலானார்கள். எனவே தனது புதிய தலைநகரை விடுத்து மீண்டும் தில்லிக்கே துக்ளக் திரும்ப வேண்டியதாயிற்று. தட்சிணத்தில் புரட்சி தோன்றியது. அதை மிகவும் சிரமப்பட்டே அவனால் அடக்க முடிந்தது. பெர்ஷியாவின் மீதும், சீனாவின் மீதும் படையெடுக்க வேண்டும் என்ற அவா அவனுள் எழுந்தது. ஆனால் பெர்ஷியாவுக்கு அனுப்பப்பட்டே படையினர் வழியிலேயே கலைந்து சென்று விட்டனர்—அவர்களுக்குச் சம்பளம் சரிவரக் கொடுக்கப் படாததே அதற்குக் காரணம். சீனாவுக்கு அனுப்பப்பட்ட ராணுவ வீரர்களோ ஹிமாலயத்தைக் கடக்கும் முயற்சியிலேயே உயிரிழந்தனர்.

துக்ளக்கின் கஜானா காலி ஆயிற்று. எனவே வெள்ளிப் பணத்தின் மதிப்புக்குச் சமமாக செப்புக் காசுகளை வெளியிட்டான் துக்ளக். ஆனால் இம் முயற்சி தோல்வியுற்றது.

அதன் காரணமாக அவனது தொல்லைகள் அதிகமாயின. வங்காளம் அவனுக்கு எதிராகப் புரட்சி செய்து தனி நாடா யிற்று. தட்சிணத்தில் பாமினி வம்சம் தோன்றி ஒரு சுதந்திர ராஜ்யத்தை நிறுவியது (கி.பி. 1347). மஹமது துக்ளக் கி பி 1351-ல் மரண மடைந்தான்.

பெரோஸ் ஷா பதவிக்கு வந்தான். அவன் சிறந்த நிர் வாகியாக விளங்கினான், முகமதியர்களின் மீது விதிக்கப்பட் டிருந்த வரிகளைக் குறைத்து, அதை ஈடுசெய்ய ஹிந்துக்களின் மீது அதிக அளவில் வரிச் சுமையை ஏற்றினான். இது ஒன் றைத் தவிர அவனது ஆட்சி குறை கூறப்பட முடியாதபடி இருந்தது. பாசன வசதிகளும் மருத்துவ வசதிகளும் அவன் காலத்தில் விரிவடைந்தன. அநேகக் கல்லூரிகளும் மசூதி களும் கட்டப்பட்டன.

பாமினி வம்சம் தோற்றுவிக்கப் படுவதற்குப் பத்து ஆண்டுகளுக்கு முன்னர் துங்கபத்திரையின் தென் கரையில் விஜய நகரத்தில் ஹரிஹரன்—புக்கன் என்ற சகோதரர்கள் தங்களது ஆட்சியை ஸ்தாபித்தார்கள். சகோதரர்களான மாதவன்-ஸயனன் என்ற இரு சிறந்த அறிஞர்கள் அவர் களுக்குப் பெருமளவு உதவி செய்ய விரைவில் விஜய நகரம் பெரும் சாம்ராஜ்யமாக விரிவடைந்தது. கிருஷ்ணாவுக்குத் தெற்கே இருந்த பிரதேசங்கள் அனைத்திலும் அவர்களது ஆட்சி பரவியிருந்தது. தென்னாட்டிலிருந்து முஸ்லிம் அதி காரம் முழுமையாக வெளியேற்றப்பட்டது. மதுரை, ஸ்ரீ ரங்கத்திலிருந்த சுல்தான்கள் விரட்டப்பட்டு கோயில் கள் புதுப்பிக்கப்பட்டன.

கிருஷ்ணாவுக்குத் தெற்கே பரவாமல் முகமதியர்களுடைய அதிகாரத்தைத் தடுத்து நிறுத்திய பேரணையாக விஜய நகர சாம்ராஜ்யம் விளங்கியது. ஹிந்து கல்வி முறைகள் மீண்டும் அமல் செய்யப்பட்டன. அநேக அறிஞர்கள் ஹிந்து புராணக் கதைகளைப் பெருமளவில் எழுதிக்குவித்தார்கள். ஹிந்து மடாலயங்கள் மீண்டும் தோற்றுவிக்கப்பட்டன. கோயில்

களுக்கு நன்கொடைகள் பெருமளவில் பெருகின. வேதங்களையும் சாஸ்திரங்களையும் படிப்பிப்பதிலும் படிப்பதிலும் பெரும் ஊக்கம் வளர்ந்தது. வைஷ்ணவ தத்துவங்களைத் தமிழிலும் சமஸ்கிருதத்திலும் எழுதிய வேதாந்த தேசிகர் வாழ்ந்ததும் இக்காலத்தில் தான்.

பதிநான்காம் நூற்றாண்டின் கடைசி வருடத்தில் தைமூர் இந்தியாவின் மீது படையெடுத்தான். தில்லியை நோக்கிச் சென்ற அவன் எதிர்ப்பட்டோரையெல்லாம் கொன்று குவித்தான். அவன் தில்லியைக் கைப்பற்றியதும் அவனது படையினர் கட்டுப்பாட்டை மீறலாயினர். மக்களைக் கொன்றும் கொள்ளையடித்தும் சிறைப்பிடித்தும் கணக்கற்ற அட்டூழியங்களைச் செய்தார்கள் அவர்கள்.

தில்லியிலிருந்து திரும்பிச் செல்வது தைமூருக்கு அவ்வளவு எளிதாக இல்லை. மக்கள் அவனது ராணுவதினரை ஹிம்சித்துக் கொடுமை செய்யத் தொடங்கினார்கள். மலையடிவாரங்களில் உள்ள கானகங்களின் ஊடே பாதையமைத்துத் தன் பயணத்தை அவன் மேற்கொள்ள நேர்ந்தது.

வட இந்தியாவில் இவ்வாறு பல வகையான தொல்லைகளின் காரணமாக அமைதியற்ற சூழ்நிலையே நிலவியிருந்தது. எனினும் பெரும் மதாசாரியார்கள் தோன்றி பக்தி மார்க்கத்தைப் பரப்பினார்கள். ஹிந்து மதத்தில் மறு மலர்ச்சி தோன்றியது. ரமானந்தர் விஷ்ணு பக்தியைப் போதித்தார். எல்லா ஜாதியினரும்-முஸ்லீம்களும் கூட—அவருடைய சீடர்கள் ஆனார்கள். முஸ்லீம் நெசவாளியான கபீர்தாஸ் ரமானந்தருடைய முக்கிய சீடராக இருந்தார். ரமானந்தருக்குப் பின் கபீர்தாஸே அவருடைய போதனைகளைப் பரப்பினார். இவ்விருவரும் மக்களால் பேசப்பட்டு வந்த மொழியிலேயே தங்களது பக்திப் பாடல்களையும் உபதேசங்களையும் செய்து வந்தனர். எனவே அவை நேரடியாக மக்களின் உள்ளங்களைத் தொட்டன. வங்காளத்தில் கிருத்திவாஸர் ராமாயணத்தை வங்காளியில் மொழி பெயர்த்தார். மகாராஷ்டிரா

வில் மராத்தி மொழியில் அநேக பக்திப் பாடல்கள் இயற்றப் பட்டன.

# 14. கி. பி. 1400—கி.பி. 1556

தைமூர் தில்லியைச் சூறையாடியதன் விளைவாகத் தில்லி சுல்தான்களின் அதிகாரம் க்ஷீணமடைந்தது. ஷர்க்கி சுல்தான் களின் கீழ் ஜோன்பூர் சுதந்திர நாடு ஆயிற்று. ஹிந்து கட்டி டப் பாணியில் இந்த சுல்தான்கள் அநேக மசூதிகளைக் கட்டி னார்கள். அந்த நூற்றாண்டின் முடிவில் ஜோன்பூர் மீண்டும் தில்லி சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதி ஆயிற்று.

வங்காளத்தை ஆண்ட சுல்தான்கள் ஹிந்துக்களை அன்பு டன் நடத்தினார்கள். அநேக ஹிந்து அதிகாரிகள் நியமிக்கப் பட்டனர். இந்த சுல்தான்களில் ஒருவன் மகாபாரதத்தை வங்காளியில் மொழி பெயர்க்கச் செய்தான்.

மால்வா வேறு சுல்தான்களின் ஆட்சியில் இருந்தது. அவர்களுள் ஒருவன் போஜ ராஜனால் கட்டப்பட்ட போஜ பூர் ஏரியை அழிவுக்குட்படுத்தினான். அவனால் உடைத்துத் தள்ளப்பட்டு சிதிலமடைந்த அந்த ஏரி வரண்டுபோக சுமார் மூன்று ஆண்டுகள் பிடித்தன.

குஜராத்தும் தில்லியின் அதிகாரத்திலிருந்து விடுபட்டு சுதந்திர நாடு ஆயிற்று. அஹமது ஷா குஜராத்தின் முதல் சுதந்திர சுல்தானாக விளங்கினான். அழகிய கட்டிடங்கள் நிரம்பிய சிறந்த நகரமாக ஆமதாபாத்தை அவன் நிர்மாணித் தான். மஹமது பிகாரா (கி.பி. 1459 - கி.பி. 1511) அதன் வலிமைமிக்க சுல்தானாக விளங்கினான். கி.பி. 1534-ல் சித் தூரைக் கைப் பற்றிய பஹதூர்ஷா குஜராத்தின் கடைசி சுல்தானாக இருந்தான்.

அலாவுதீனின் மரணத்துக்குப் பின்னர் சித்தூர் மீண்டும் சுதந்திர நாடு ஆயிற்று. ஸெஸோதியா இனத்தைச் சேர்ந்த வீரம் மிக்க மன்னர்கள் அங்கு ஆட்சி புரிந்தனர். மால்வா, குஜராத் சுல்தான்களைப் போரில் வென்று புகழ்பெற்ற கீர்த்தி ஸ்தம்பம் ஒன்றை சித்தூர் மன்னர்களுள் ஒருவன் நிர்மாணித்தான். ராணு சங்கிரம ஸின்ஹா தன் வாழ் நாள் முழுதும் முகமதியர்களுடன் போரிடுவதிலேயே கழித்தான். அவர்களைப் பலமுறை தோல்வியுறவும் செய்தான்.

தைமூர் தில்லியைத் தாக்கி ஐம்பது ஆண்டுகள் கழிந்த போது, பதான்களின் லோடி இனத்தைச் சேர்ந்த ராஹ் லோல் கான் தில்லியின் சுல்தான் ஆனுன். அவனுடைய மகன் சிக்கந்தர் லோடி தன் ராஜ்யத்தின் எல்லைகளை எல்லாத் திசைகளிலும் விரிவடையச் செய்தான். அவனுடைய மகன் இப்ராஹிம் லோடியோ தன்னுடைய பிரபுக்களுடன் சண்டையிட்டவனுக, காபூல் சுல்தானுன பாபரை இந்தியாவின் மீது படையெடுக்குமாறு அழைத்தான்.

பாபரின் படையெடுப்பு கி.பி. 1526-ல் நிகழ்ந்தது. பானிபட் போரில் இப்ராஹிம் லோடியைத் தோல்வியுறச் செய்து பாபர் தில்லியின் சுல்தான் ஆனுன். இந்தியாவில் முதல் முறையாக பீரங்கிகள் பயன் படுத்தப் பட்டது பானிபட் போரில்தான். அடுத்து பாபர் மோதியது சித்தூர் மன்னன் ராணு சங்கிரம ஸின்ஹாவுடன்.

ராணு சங்கிரம ஸின்ஹா நூறு போர்களில் பங்கேற்ற மாவீரன். அதன் காரணமாக ஒரு கண், ஒரு கை ஆகியவற்றை இழந்து, நொண்டியாகி விட்ட காலும் எண்பது போர்க் காயங்களின் தழும்புகளும் அடைந்தவன். பாபரின் தாக்குதலை எதிர்த்து இந்த ராஜ புத்திர மன்னன் வீரத்துடன் போரிட்டான். ஆனுல் பாபர் தன்னுடைய குதிரைப் படையைக் கொண்டு ராஜ புத்திர ராணுவத்தைச் சுற்றி வளைத்து அதன் பின் புறத்திலிருந்து தாக்கினுன். முடிவில் சங்கிரமஸின்ஹா தோல்வி யடைந்தான். அடுத்து பீஹா

-ரையும் வங்காளத்தையும் தன் அதிகாரத்தின் கீழ் கொண்டு வந்தான் பாபர்.

பாபர் மரணமடைந்தது கி.பி. 1530-ல்.

பாபருக்குப்பின் அவனது மகன் ஹுமாயூன் தில்லி சுல்தானகப் பதவியேற்ருன். பீஹாரின் ஆப்கானியத் தலைவனான ஷெர்கானும் குஜராத்தின் பகதூர் ஷாவும் ஹுமாயூனுக்கெதிராக சதித் திட்டம் தீட்டினர். சங்கிரமஸின் ஹாவின் மரணத்துக்குப்பின் பகதூர் ஷா சித்தூரைக் கைப்பற்றினன். ராணி கர்ணுவதி ஹுமாயூனின் பாதுகாப்பை நாடினுள். பகதூர் ஷாவை வெற்றிகண்ட ஹுமாயூனின் கவனம் அடுத்து ஷெர்கானின் பக்கம் திரும்பியது.

ஷெர்கான் இப்போது ஷெர்ஷா என்ற பட்டத்தைப் பெற்றிருந்தான். அவனிடம் ஹுமாயூன் தோல்வியுற நேர்ந்தது. அதன் விளைவாக அவன் வீடு வாசல் அற்று சுற்றித் திரியவேண்டியதாயிற்று, பல அரசவைகளிலும் ஹுமாயூன் அடைக்கலம் நாடினுன். ஆனுல் எங்கும் ஏமாற்றமே மிகுந்தது. இவ்வாறு அவன் சுற்றித் திரிந்த காலத்தில் தான் கி. பி. 1542-ல் உமர்கோட்டில் அவனது மகன் அக்பர் பிறந்தான்.

ஷெர்ஷாவின் ஆட்சி கி பி 1540-லிருந்து கி.பி. 1545வரை நீடித்தது. ராஜபுதனம், மால்வா, பண்டல்கண்ட் ஆகியவற்றை அடிமைப்படுத்த அவன் செய்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. ஷெர்ஷா சிறந்த நிர்வாகியாக விளங்கினுன். நிலத்தைச் சரிவர அளந்த பின்னரே அதற்குரிய வரியை முடிவு செய்தான். பாரபட்சமற்ற முறையில் நீதி வழங்கப்பட்டது. சாலைகளை அமைத்து, மரங்களை நட்டு, கிணறுகள் தோண்டியதுடன் பழைய ஹிந்துமன்னர்களைப் போன்று பிரயாணிகளுக்காகப் பல சத்திரங்களையும் அவன் கட்டினுன். தில்லியில் ஒரு புதியநகரமும் ஷெர்ஷாவினுல் கட்டப்பட்டது.

அவனது மரணத்துக்குப் பின்னர் அரசுரிமை குறித்துப் பல சிக்கல்கள் எழுந்தன தில்லியின் மந்திரியாக இருந்த

ஹேமுவின் கையிலேயே அதிகாரங்கள் அனைத்தும் இருந்தன. பின்னர் கி.பி. 1555-ல் ஹுமாயூன் படைதிரட்டி வந்து ஆக்ரா, தில்லி ஆகியவற்றைக் கைப்பற்றினன். ஆனல் விரைவிலேயே அவனுக்கு மரணம் சம்பவித்தது.

இப்போது ஹேமு தில்லியை மீண்டும் கைப்பற்றியதோடு விக்கிரமாதித்யன் என்ற பட்டத்தையும் ஏற்று பஞ்சாபின் மீது படையெடுத்தான். ஹுமாயூனின் குமாரனை அக்பரும் அவனுக்கு உறுதுணையாகவும் வளர்ப்புத் தந்தையாகவும் விளங்கிய பைராம்கானும் ஹேமுவைப் பானிபட்டில் எதிர்த்து வெற்றி பெற்றனர். பைராம்கான் ஹேமுவைக் கொன்முன்; அக்பர் சுல்தானுக முடிசூடினன்.

துக்ளக்குகளின் காலத்திற்குப்பின்னர் இந்தியர்கள் பெர்ஷிய மொழியைக் கற்கத் தொடங்கியிருந்தார்கள். விரைவில் அம்மொழியில் சிறந்த ஆசிரியர்களும் தோன்றினர். இந்தியாவின் பல பகுதிகளிலும் நிகழ்ந்த சுல்தான்களின் எழுச்சியும் வீழ்ச்சியும் மதத்துறையில் ஹிந்துக்களின் முன்னேற்றத்தை எந்த விதத்திலும் பாதிக்கவில்லே.

இக்காலத்தின் மிகச்சிறந்த மதாசாரியராக சைதன்யர் விளங்கினர் (கி.பி. 1486. கி.பி. 1527). வங்காளத்தில் நவத்வீபத்தில் உதித்தவர் அவர். விஷ்ணுவே சிறந்த தெய்வம் எனவும், எவ்வகையான சுயநலமுமின்றி அவர் பூஜிக்கப்பட வேண்டும் எனவும் சைதன்யர் உபதேசித்தார். ஜாதி மத வேறுபாடுகளே ஒதுக்கி முகமதியரையும் தம்முடைய சீடர்களாகும்படி அவர் அழைத்தார். விஷ்ணுவின் கிருஷ்ணவதாரத்தின் மீது பக்தி கொள்வதன் அவசியம் குறித்து அவர் போதித்தார். பக்தர்கள் இரந்து வாழ வேண்டும் எனவும் அவர் வற்புறுத்தினர்.

வேறு ஒருவகையான கிருஷ்ண வழிபாட்டு முறை வல்லபர் என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. எல்லா எளிமை நிரம்பிய முறைகளேயும் எதிர்த்து கேளிக்கை நிரம்பிய இன்பமயமான வாழ்வை அவர் உபதேசித்தார்.

கிருஷ்ணனிடம் ஈடுபாடுகொண்ட பக்தைகளும் தோன்றி ஞர்கள். மேவார் ராணுவின் மனைவியான மீராபாய் கிருஷ்ணனைப் போற்றி அநேகத் துதிப்பாடல்களை இயற்றி ஞள். தட்சிணத்தில் நாமதேவ் ஸ்வாமி பக்தி மார்க்கத்தை போதித்தார். அவர் மராத்தி மொழியில் அனேகப் பாடல் களையும் பாடினுர். இத்தகைய பாடல்களுடன் விஷ்ணுவின் அரும் செயல்கள் குறித்து விளக்கும் ஹரிகதைகள் (காலட் சேபங்கள்) மகாராஷ்டிரத்தில் பக்தி மார்க்கத்தின் முக்கிய அம்சமாக விளங்கியது.

தோற்றம் முதலே பாமினி ராஜ்யத்துக்கும் விஜயநகர சாம்ராஜ்யத்திற்கும் இடைவிடாத மோதல் நிகழ்ந்த வண்ணம் இருந்தது. குறிப்பிட்டுச் சொல்லும் படியாக எந்த பாமினி சுல்தானும் சிறந்து விளங்க வில்லை. ஆனல் அவர்களுடைய மந்திரிகளுள் ஒருவர் மிகவும் புகழ்பெற்று விளங்கினர். அவர் பெயர் க்வாஜா கவான், அவர் மிகவும் நல்லவர், சிறந்த அறிவாளி. பாமினி சுல் தானின் அதிகாரத்தைப் பெருக்க அவர் பெரிதும் முயன்றார். நிதி, நீதி, ராணுவம், பொதுக்கல்வி, நிலவரி போன்ற நிர் வாகத் துறைகளில் அனேகச் சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தார். ஆனல் காரணம் ஏதும் இன்றி பாமினி சுல்தான் கவானை கி.பி. 1481-ல் மரண தண்டனை விதித்துக் கொன்று விட்டான். அப்போது அவருக்கு 78 வயது. விரைவில் பாமினி ராஜ்யம்—அது தோன்றி நூற்றுண்டுகளுக்குப் பின்—ஐந்து சிறு ராஜ்யங்களாக உடைந்தது. பீடார், பேரார், கோல்கொண்டா, அகமது நகர், பீஜப்பூர் ஆகியவை அவை ஆகும்.

இந்த ஐந்து சுல்தான்களும் தங்களுடைய தலைநகரங் களில் சிறந்த அரண்மனைகளையும் மசூதிகளையும் கட்டினுர்கள். அழகிய கட்டிடங்களை எழுப்புவதில் ஒருவர்க்கொருவர் போட்டியிட்டு நின்றனர். பீடாரின் அரண்மனைகள் அழகும் கம்பீரமும் நிறைந்து விளங்கின. பேரார் சுல்தான் கவில்கர் கோட்டையை சிறப்புற அமைத்தான். கோல்கொண்டா

சுல்தான்கள் ஹைதராபாத்தை தங்கள் தலைநகராக்கினார்கள். அகமது நகரில் சலவைக் கற்களினாலான அரண்மனை ஒன்று கட்டப்பட்டது.

அகமது நகர் சுல்தான்கள் மராத்தியர்களுக்கு உயர்ந்த பதவிகளை அளித்தனர். இந்த ஐந்து ஆட்சிகளிலும் பீஜப்பூரே சிறந்து விளங்கியது. அதன் புகழ்பெற்ற சுல்தான் யூஸுஃப் அடில்ஷா ஒரு மராத்தியப் பெண்மணியை மணந்து கொண்டான். மராத்தி அரசவை மொழி ஆயிற்று. அடில் ஷா மகத்தான கட்டடங்களை எழுப்பினான். பீஜப்பூரின் மசூதி உலகத்திலேயே இரண்டாவது மிகப்பெரிய மண்டபத்தை உடையதாக விளங்கியது. கல்வி வசதிகள் சிறப்பாக செய்யப்பட்டன. ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பள்ளிக்கூடம் இருந்தது. நகரத்திலிருந்த கல்லூரிகளோ நிறைந்த பொருள் வசதிகளுடன் விளங்கின.

இதனிடையில் விஜயநகர சாம்ராஜ்யம் வளமும் வலிமையும் பெற்று வளர்ந்து வந்தது. அதனை ஆண்டுவந்த மாமன்னர்கள் அழகிய கட்டடங்களை நிர்மாணித்து அந்நகரின் சிறப்புக்கு அடிகோலினார்கள். பதினைந்தாம் நூற்றாண்டின் புகழ் பெற்ற, மிகச்சிறந்த, மிகப் பெரிய நகரமாக அது விளங்கியது. துங்கபத்திரையின் குறுக்கே பெரும் அணை ஒன்று கட்டப்பட்டது. பதினைந்து மைல் நீளமுள்ள கால்வாய்களின் வழியாகத் தண்ணீர் நகரத்துக்குக் கொண்டு செல்லப்பட்டது. சுமார் ஏழு மைல் தூரம் வரை இக்கால்வாய் பாறைகளைப் பிளந்து கட்டப்பட்டிருந்தது.

பல வகையிலும் விஜயநகரம் சிறந்து விளங்கியது. ஊர்வலங்களின்போது அணிவகுத்துச் சென்ற யானைகள் கடலலைகளைப்போன்று காட்சியளித்தன. விலைமதிப்பற்ற தங்க ஆபரணங்கள் மன்னனுடைய குதிரைகளுக்கு அணிவிக்கப்பட்டன. சிம்மாசனத்தைத் தங்கத்தினால் செய்து அதில் வைர வைடூரியங்களைப் பதித்திருந்தனர்; அதன் கீழ் அமைந்திருந்த மேடைகள் ஒவ்வொன்றும் ஏழு சதுர கெஜ அளவுள்

ளவையாக இருந்தன. அவற்றின் பக்கச் சுவர்களும் தளங் களும் தங்கத்தினுல் செய்யப்பட்டிருந்தன. அவற்றில் விலை உயர்ந்த கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. கத்தியின் கனபரி மாணமுள்ள அவற்றின் தங்கச் சுவர்கள் தங்கத்தினுலான ஆணிகளைக் கொண்டு பொருத்தப்பட்டிருந்தன.

விஜய நகரத்தின் பராக்கிரமம் மிக்க சக்ரவர்த்தியாக விளங்கியவன் கிருஷ்ணதேவராயன் (கி.பி. 1509 கி.பி. 1529) பாமினி ராஜ்யத்திலிருந்து பிரிந்து சுதந்திர ஆட்சிகளைத் தோற்றுவித்த ஐந்து சுல்தான்களையும் அவன் பூரணமாக அடக்கி வைத்திருந்தான். அவனது போர் வீரர்களின் எண் ணிக்கை பத்து லட்சத்துக்கும் அதிகமாக இருந்தது. அவனது எதிரிகள் கிருஷ்ணதேவராயனிடம் மிகுந்த பயம் கொண்டி ருந்தார்கள்.

கிருஷ்ணதேவராயன் ஏராளமான புதிய கோயில்களைக் கட்டினுன். பழைய கோயில்களுக்கு நூற்றுக்கால் மண்டபங் களையும் ஆயிரங்கால் மண்டபங்களையும் புதிதாகக் கட்டி இணைத்து அவற்றைப் பெரிதாக்கினுன். அவன் தெலுங்கு மொழில் சிறந்த கவியாக இருந்ததோடு அநேக சம்ஸ்கிருத, தமிழ், தெலுங்கு, கன்னட கவிஞர்களுக்கும் ஆதரவு அளித் தான்.

கிருஷ்ண தேவராயனின் மரணத்துக்குப் பின்னர், விஜய நகரத்தின் பெருமையைக் குலைக்கும் பொருட்டு ஐந்து சுல்தான்களும் ஒன்று சேர்ந்தனர். அப்பொழுது மகாராஜா வாக இருந்தவன் அச்சுதராயன். அவன் பெயருக்குத்தான் மன்னனுக விளங்கினுன். உண்மையான அதிகாரம் அவனது மந்திரியான ராமராஜாவிடமே இருந்தது. ராமராஜா இந்தியாவின் மிகச் சிறந்த போர் வீரர்களுள் ஒருவனுக விளங்கியவன்.

கி.பி. 1565-ல் சுல்தான்களின் கூட்டு ராணுவம் விஜய நகரத்தின் மீது படையெடுத்தது. தன்னுடைய வீரர்களுக்கு உற்சாகம். அளிக்கும் பொருட்டு ராமராஜா படையணியின்

முன்னால் தலைமை தாங்கி யானை மீதமர்ந்து போரிட்டான். யுத்தத்தின் மத்தியில் திடுமென வெறி பிடித்த யானை அவனைத் தூக்கி யெறிந்தது. அகமது நகர் சுல்தானால் ராமராஜா கைது செய்யப்பட்டுக் கொல்லப்பட்டான். விஜய நகர ராணுவம் சிதறி ஓடத் தொடங்கியது. முகமதிய ராணுவம் அவர்களைத் தொடர்ந்து சென்று விஜய நகரத்தை யடைந்து நெருப்பிட்டும் உடைத்துத் தள்ளியும் அந்நகரை அழித்தது. பாழடைந்த அந்தப் புகழ் மிக்க நகரத்தின் பகுதிகள் சிதில மடைந்த நிலையில் அதன் நினைவுச் சின்னமாக இன்றும் ஹம்பிக் கருகாமையில் உள்ளன.

விஜய நகரத்தின் அழிவு அதன் சாம்ராஜ்யத்தின் முற்றுப் புள்ளியாகிவிட வில்லை. சாம்ராஜ்பத் தலைநகர் முதலில் பெனு கொண்டாவுக்கும், பின்னர் சந்திரகிரிக்கும் மாற்றப் பட்டது. விஜயநகர மன்னர்கள் மேலும் தொடர்ந்து நூற்றைம்பது ஆண்டுகளுக்கு ஆட்சி புரித்தார்கள். கவிஞர் களுக்கும், அறிஞர்களுக்கும், மதாசாரியார்களுக்கும் தங்களது பேராதரவை தொடர்ந்து அளித்து வந்தார்கள்.

# 15. போர்ச்சுகீசியர் வருகை

இந்தியாவின் வடக்கே நிரந்தரமாகப் பனிமூடிய சிகரங்கள் கொண்ட இமாலயம் ஒரு மாபெரும் சுவராக மத்திய ஆசியாவை மறைத்து நின்றது. அதன் ஊடே ஒரு சில கணவாய்களே இருந்தன. எனவே அதன் வழியாக தலைச் சுமைகளுடன் சிறு சிறு கூட்டத்தினரே இந்தியாவினுள் வர முடிந்தது. அவற்றின் வழியே பெரும் ராணுவங்களின் அணிவகுப்போ அல்லது வணிகத் தொடர்புகளோ சரிவர நடைபெற இயலாது இருந்தது.

இமாலயத்தின் மேற்கு முனையிலிருந்து தெற்கே இந்து மகா சமுத்திரத்தைத் தொடும் வரையில் தொடர்ச்சியான மலைகள் இடம் பெற்றிருந்தன. அவற்றின் ஊடே கைபர், போலன் போன்ற கணவாய்கள் வெளி நாட்டு ராணுவங்களுக்கு வழியளித்தன. அதைப் பயன் படுத்தி ஸாகர்கள், பல்லவர்கள், ஹீணர்கள், கூர்ஜரர்கள் போன்ற பல வெளி நாட்டு இனத்தவர் இந்தியாவுக்குள் வந்தனர். அவர்கள் பின்னர் இங்கேயே தங்கி இந்த நாட்டு மக்களுடன் ஒன்று கலந்தனர்.

இந்தியாவின் மத்தியில் ஆரவல்லி, விந்தியா, மேற்குத் தொடர்ச்சி, கிழக்குத் தொடர்ச்சி மலைகள் எழுந்து நின்றன. ஆயினும் அவை மிகவும் உயரமான மலைகளாக இருக்கவில்லை. எனவே ஆரம்ப காலம் முதலே உள்நாட்டு வியாபாரம் பெருமளவில் நிகழ்ந்து வந்தது. வட இந்திய மன்னர்கள் தங்களது அதிகாரத்தை தெற்கேயும் பரப்பினார்கள். போதிய வலிமை பெற்ற போதெல்லாம் தமிழ் மன்னர்களும் படையெடுத்துச் சென்று தங்கள் அதிகாரத்தை நிலை நாட்டினார்கள்.

வட இந்திய மதகுருமார்களின் போதனைகள் தென்னாட்டில் பரவின. தென்னகத்து மதாசாரியார்களின் உபதேசங்களும் எவ்விதத் தடையுமின்றி வடக்கே பரவின. அதன் காரணமாக நாலாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக ஒருமித்த கலாசாரம் இந்த நாட்டில் நிலை பெற்றுத் திகழ்ந்தது. ஆனால் பாரதத்தின் விஸ்தாரமான பரப்பு வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு மொழிகளின் எழுச்சிக்கும் வளர்ச்சிக்கும் காரணமாயிற்று. அதன் விளைவாக ஹிந்துஸ்தானத்து மக்கள் பல பகுதிகளாகப் பிரிந்தனர். ஆனால் முகமதியர்களோ ஒரே பொது மொழியின் காரணமாக வலுவான இணைப்பைப் பெற்றிருந்தனர்.

தட்சிண பீட பூமி பருத்திக்குச் சிறந்த இடமாக விளங்கியது. பருத்தி ஆடை நெசவு ஒரு சிறந்த தொழிலாக

வளர்ச்சி பெற்றது. உலகின் பல பகுதிகளுக்கும் பதினெட்டாம் நூற்றாண்டின் முடிவு வரை இங்கிருந்து பருத்தி ஆடைகள் ஏற்றுமதி செய்யப்பட்டன. ஆற்றுச் சமவெளிப் பகுதிகளில் விவசாயம் சிறப்புற நடந்தது. கோதுமையும் அரிசியும் பெருமளவில் விளைந்தன. தேவைக்கும் மேற்பட்டு விளைந்த இந்தத் தானியங்கள் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. வணிகத் தொடர்புகள் பெருகிய போது இந்திய அறிவுச் செல்வமும் வெளி நாடுகளுக்குச் செல்லலாயிற்று.

ஐரோப்பாவில் பெரும் கப்பல்களைக் கட்டலானார்கள். கடல் வழியே இந்தியாவுடன் தொடர்பு கொள்ளும் வாய்ப்பு அதன் விளைவாக அவர்களுக்கு ஏற்பட்டது. ஐரோப்பிய வியாபாரிகள் இந்தியாவுக்கு வரத் தொடங்கினார்கள். அவர்களுக்கு வழிகாட்டியாக விளங்கியவன் வாஸ்கோடகாமா. அவன் கி. பி. 1498-ல் இந்தியாவுக்கு வந்து மலபாரின் கடற்கரையில் இறங்கினான்.

இந்திய வியாபாரத்தைக் கைப்பற்ற வேண்டும் என்பது போர்ச்சுகீசியரின் நீண்டகால விருப்பமாக இருந்துவந்தது. பல நூற்றாண்டுகளாக இந்திய வியாபாரம் அரேபியர் வசமே இருந்தது. போர்ச்சுகீசியர் முகமதியர்களை வெறுத்து வந்தனர். பல நூற்றாண்டுகள்வரை ஸ்பெயினும் போர்ச்சுகலும் முகமதியரின் அதிகாரத்தின் கீழ் இருந்து வந்தன. மிகுந்த பிரயாசைக்குப் பின்னரே அவை சுதந்திரம் அடைந்தன. விஜயநகர மன்னர்களும் முகமதியர்களை வெறுத்தனர். எனவே அவர்கள் போர்ச்சுகீசியர் மலபாரில் குடியேறுவதற்குப் பெரும் உதவிகள் செய்தனர்.

போர்ச்சுகீசிய வியாபாரிகள் அநேகக் குதிரைகளை இறக்குமதி செய்து விஜயநகர மன்னர்களுக்கு விற்பனை செய்தனர். அவர்களுடைய உதவியைப் பெற்றவர்களாக மேற்குக் கடற்கரையில் ஒரு சின்னஞ்சிறிய ராஜ்யத்தையும் ஸ்தாபித்தார்கள். கோவா அதன் தலைநகர் ஆயிற்று. ஆனால் விஜயநகர சாம்ராஜ்யம் சரிந்து விழுந்தபோது போர்ச்சுகீசியரின் செல்வாக்கும் அதிகாரமும் கூடவே சரிந்து விழுந்தன.

# 16. கி. பி. 1556-கி. பி. 1707

அக்பர் பதவிக்கு வந்தபோது, சிறிய எல்லைக்குள்ளேயே ஆட்சி புரிய வேண்டியிருந்தது. ஆனால் அவனது மனத்தில் எழுந்த திட்டங்களும் கனவுகளுமோ பரந்து விரிந்திருந்தன. இந்தியா முழுதும் தன் ஆட்சியின்கீழ் வரவேண்டும்; இஸ்லாமும் ஹிந்து தர்மமும் இணைக்கப்படவேண்டும்; இவ்வாறு ஒருமித்து விளங்கும் இந்தியா உலகின் மிகச் சிறந்த நாடாகத் திகழவேண்டும் என்று இவ்வாறு எல்லாம் அக்பர் தீவிரமாக விரும்பினான்.

அக்பர் முதலில் குவாலியர், ஆஜ்மீர், ஜோன்பூர் ஆகியவற்றைக் கைப்பற்றினான். கி. பி. 1561-ல் அவனது ராஜ்யம் பஞ்சாப், மூல்தான், கங்கைச் சமவெளியென விரிவடைந்தது. கி. பி. 1568-ல் அவன் சித்தூரைக் கைப்பற்றினான். அங்கிருந்த ஸெஸோதிய மன்னன் பாலைவனப்பகுதிக்கு ஓடியவனாக உதயபூர் ராஜ்யத்தை அங்கு ஸ்தாபித்தான். அதன் பிறகு நிகழ்ந்தவை தொடர்ச்சியான வெற்றிக் கதையாகும். கி. பி. 1573-ல் குஜராத், 1576-ல் வங்காளம், 1581-ல் காபூல், 1586-ல் காஷ்மீர், 1591-ல் சிந்து, 1592-ல் ஒரிஸ்ஸா, 1595-ல் பேரார், 1660-ல் அகமது நகரில் ஒரு பகுதி, 1601-ல் காந்தேஷ் என்று இவ்வாறு அவனது அதிகாரம், உதயபூர், பீஜப்பூர், கோல்கொண்டா, விஜயநகர சாம்ராஜ்யத்தின் எஞ்சியிருந்த பகுதிகள் ஆகியவை தவிர, இதர இடங்களில் பரவியது.

மக்களை ஒரே தேசத்தவராக ஆக்கவிரும்பிய அக்பர் ஹிந்துக்களையும் முஸ்லீம்களையும் தனது அதிகாரிகளாக நியமித்தான். இந்த இரு இனத்தவரிடையேயும் கலப்புத் திருமணம் நிகழ்வதை ஆதரித்தான். அது மட்டுமின்றி

தானே ஒரு ராஜ புத்திரப் பெண்மணியையும் மணந்து கொண்டான். தின் இலாஹி என்ற புதிய மதம் அக்பரால் தோற்றுவிக்கப்பட்டது. ஹிந்து தர்மம், இஸ்லாம் ஆகிய வற்றின் பொதுவான அம்சங்களை அது கொண்டிருந்தது. கிறிஸ்தவர்கள் உட்பட எல்லா மதங்களையும் சேர்ந்த அறிஞர்களையும் தனது அவைக்கு அழைத்து அவர்களுக்கு சமமான ஆதரவையும் அளித்தான்.

பெரும் சாம்ராஜ்யத்தை நிர்வகிப்பதில் அக்பருக்கு உதவியாக தோடர்மல், அபுல் ஃபாஸல் என்ற இரு மந்திரி கள் இருந்தனர். விளைச்சலுக்கேற்பவே நிலங்களுக்கு வரிகள் விதிக்கப்பட்டன. தொழிலதிபர்களும் வியாபாரிகளும் ஊக்குவிக்கப்பட்டனர். மக்கள் வளம் நிறைந்த வாழ்க் கையை அனுபவித்தனர். விக்கிரமாதித்யன் போன்ற பழம் பெரும் ஹிந்து மன்னர்களைப் போலவே அக்பரும் தனது தர்பாரைத் தினமும் கூட்டினான். அங்கு எந்தவித வேறுபாடு மின்றி ஏழைகளும் கூடச் சென்று தங்களது குறைகளை எடுத்துக் கூறினர். அவனருகே ஒன்பது சிறந்த அறிஞர்கள் எப்போதும் இருந்துவந்தனர். அவர்கள் பாதுஷாவின் நவரத்தினங்கள் என அழைக்கப்பட்டனர். விக்கிரமாதித் யனைப் போன்று அக்பராலும் ஒரு புதிய சகாப்தம் தோற்று விக்கப்பட்டது. அது இலாஹி சகாப்தம் என அழைக்கப் பட்டது.

அக்பரின் காலத்தில் பல மொழிகளிலும் நூல்கள் இயற்றப்பட்டன. துளசிதாஸர் ஹிந்தியில் ராமாயணத்தை எழுதினார். அக்பரின் வாழ்க்கைச் சரிதையை 'அக்பர் நாமம்' என்ற பெயரிலும், அவனது சாம்ராஜ்யச் சிறப்பு குறித்து 'ஐன் இ அக்பரி' என்ற பெயரிலும் இரண்டு நூல்கள் அபுல் ஃபாஸலால் எழுதப்பட்டன. மேலும் சிறந்த சம்ஸ் கிருத நூல்களையும் அவன் பெர்ஷிய மொழியில் பெயர்த்து எழுதினான். அக்பர் காலத்திய மிகச் சிறந்த நூலாக 'ராம சரித் மனஸ்' என்ற பெயர் கொண்டு ஹிந்தி ராமாயணம் விளங்கியது. அக்பரே ஒரு கவிஞனாகவும் இசைப் பிரியனாக

வும் இருந்தான். அநேக இசை வல்லுனர்கள் அவனது ஆதரவைப் பெற்றிருந்தனர், அவர்களுள் குறிப்பிடத்தக்கவராக விளங்கியவர் தான்ஸேன். அக்பரின் மிகச் சிறந்த நண்பராக விளங்கியவர் மகேஷதாஸ் (பீர்பால்) என்ற அறிஞர். இந்திய சைத்ரீகர்களைப் பெர்ஷியக்கலை முறைகளைக் கற்றுத் தேறும்படியாக அக்பர் ஊக்குவித்தான். அதன் விளைவாக வண்ணச் சித்திரம் தீட்டுவதில் முகலாய பாணி உருவாயிற்று. கட்டிடக்கலையிலும் இந்திய—பெர்ஷிய பாணிகளை ஒன்று படுத்தினன் அக்பர். இந்தப் புதிய பாணியில் அவன் கட்டுவித்தது ஆக்ரா கோட்டையும், அதனுள் அநேக அழகிய கட்டிடங்களும். ஆக்ராவுக்கு மேற்கே இருபத்திமூன்று மைல் தூரத்தில் தனது வாசஸ்தலமாக ஃபதேபூர்—சிக்ரி என்ற அழகிய நகரத்தையும் அவன் நிர்மாணித்தான்.

ஆனல் அக்பர் தன் வாழ்நாளில் கொண்டிருந்த மகத்தான லட்சியங்கள் அவனது மறைவுக்குப் பின்னர் தோல்வியடைந்தன. அவன் ஸ்தாபித்த மாபெரும் சாம்ராஜ்யம் நூறு ஆண்டுகள்கூட நிலைக்கவில்லை. அவன் தோற்றுவித்த புதிய மதம் அவன் மரணமடைந்த உடனேயே மறைந்தது. ஒரு தேசத்தவராக அவன் ஒன்றுபடுத்த முயன்ற ஹிந்துக்களும் முஸ்லீம்களும் விரைவில் தங்களுக்கிடையே விரோதம் கொண்டு சண்டையிடத் தொடங்கினர்.

அக்பர் தனது சாம்ராஜ்யத்தை விஸ்தரித்து வந்த அதே காலத்தில் இங்கிலாந்தில் அரசி எலிஸபெத் ஆட்சி புரிந்து வந்தாள். அவளுடைய காலத்தில் ஆங்கிலேயர் அநேகப் பெரிய கப்பல்களைக் கட்டி கிழக்கிலும் மேற்கிலும் நீண்ட தூரப் பயணங்களை மேற் கொண்டு பலநாடுகளுக்கும் சென்றனர். அவர்கள் புதிய நாடுகளைக் கண்டு பிடித்தனர். வெளிநாட்டு வியாபாரத் தொடர்புகளுக்கும் சாம்ராஜ்ய விஸ்தரிப்புக்கும் வித்திட்டனர். பிரிட்டனின் வாணிப வளர்ச்சிக்கு டிரேக் புதிய கடல் வழிகளை அறிமுகப் படுத்தினன். அநேக ஆங்கில வியாபார நிறுவனங்கள் தோன்றின. பிரிட்டிஷ்

சாமான்களை விற்பனை செய்யவும் வெளி நாட்டுப் பொருள்களை வாங்கவும் கப்பல்கள் உலகின் பல பகுதிகளுக்கும் அனுப்பப்பட்டன.

அந்த நாட்களில் டச்சுக்காரர்கள் இந்தியாவிலிருந்தும், இந்து மகா சமுத்திரத்தின் பல தீவுகளிலிருந்தும், பெருமளவில் மிளகு வாங்கி ஐரோப்பாவில் அதிக விலைக்கு விற்று வந்தனர். ஆங்கிலேயருக்கு மிளகு மிகவும் அத்தியாவசியமான பொருளாக இருந்தது. எனவே அவர்கள் கிழக்கிந்தியத் தீவுகளுடன் வியாபாரம் செய்யும் பொருட்டு கி.பி. 1598-ல் ஒரு கம்பெனியை நிறுவினர். அரசி எலிசபெத் இக்கம்பெனிக்கும், இது போன்ற இதர நிறுவனங்களுக்கும் முழு வியாபார உரிமைகளை வழங்கினாள். அதற்குப் பிரதியாகப் பணமும் பெற்றுக்கொண்டாள். கிழக்கிந்திய தீவுகளுடன் வியாபாரம் செய்யும் முழு உரிமையும் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு அளிக்கப்பட்டது. முதலில் இந்தியாவிலிருந்து மிளகு ஏற்றுமதி செய்யத் தொடங்கிய இக்கம்பெனி பின்னர் உயர்ந்த பருத்தி ஆடைகளையும் ஆபரணங்களையும் அனுப்பத் தொடங்கியது.

அக்பரின் மரணத்துக்குப் பின் அவன் மகன் ஸலீம் ஜஹாங்கீர் என்ற பெயருடன் பதவிக்கு வந்தான். அகமது நகரின் ஒரு பகுதியைக் கைப்பற்றித் தனது ராஜ்யத்தின் எல்லையை அவன் விரிவு படுத்தினான். அவனது தந்தையை எதிர்த்து வந்த உதய்பூர் ராணா, ஸலீமுக்கு அடிபணிந்தான், கங்ரா கோட்டையையும் ஜஹாங்கீர் கைப்பற்றினான், ஆனால் அவன் காந்த ஹாரை இழக்க வேண்டியதாயிற்று—பெர்ஷியாவின் மன்னனான ஷா அதை வெற்றிகொண்டான்.

ஜஹாங்கீரின் மனைவி நூர்ஜஹான் உலகில் தலைசிறந்த அழகியாகத் திகழ்ந்தாள். அவள் மிகுந்த அறிவாளியுங்கூட. எனவே அரசாங்க நிர்வாகத்தின் பெரும்பகுதியை அவளிடமே சக்கரவர்த்தி விட்டு வைத்திருந்தான்.

போர்ச்சுகீசிய மதகுருமார்கள் ஜஹாங்கீரின் நெருங்கிய நண்பர்களாக இருந்தனர். விஜய நகரத்தின் வீழ்ச்சிக்குப் பின்னர் போர்ச்சுகீசியரின் செல்வாக்கு அழிந்துவிட்டிருந்தது. எனவே இந்த மத குருமார்கள் ஜஹாங்கீரிடம் போர்ச்சுகீசிய வியாபாரிகளை ஆதரிக்குமாறு தூண்டினார்கள்.

டச்சுக்காரர்களுக்குப் போட்டியாக கி. பி. 1600-ம் ஆண்டிலேயே இந்தியாவுடன் வியாபாரம் செய்யும் பொருட்டு ஆங்கிலேயர்கள் ஒரு கம்பெனியை நிறுவியிருந்தார்கள். இங்கிலாந்து மன்னன் முதலாம் ஜேம்ஸின் தூதுவர்களாக முகலாய அரசவைக்கு காப்டன் ஹாக்கின்ஸும் ஸர். தாமஸ் ரோவும் வந்து மன்னனைப் பேட்டி கண்டனர். அவர்கள் பிரிட்டிஷ் வியாபாரிகளை ஆதரிக்குமாறு ஜஹாங்கீரைக் கேட்டுக் கொண்டார்கள். அதன் விளைவாகப் போர்சுக்கீசியருக்கும் பிரிட்டிஷ் வியாபாரிகளுக்கும் இடையே விரோதம் வளரத்தொடங்கியது.

அக்பரைப் போலவே ஜஹாங்கீரும் எல்லா மதத்தினரையும் ஆதரித்து வந்தான். ஆயினும் அவனது ஆட்சிக் காலத்தில் சீக்கியர்களின் குருவான அர்ஜுன் சக்கரவர்த்தியின் ஆணைக்கிணங்க கொடுமைப் படுத்தப் பட்டார். இது சீக்கியருக்குப் பெருத்த கோபத்தை உண்டு பண்ணியது. தங்களது மதத்துக்காகப் போராட அவர்கள் தேவையான பயிற்சிகளை மேற்கொள்ளத் தொடங்கினார்கள்.

தந்தையைப் போலவே ஜஹாங்கீரும் கலைகளைப் பெருமளவில் ஆதரித்து வந்தான். அழகிய கட்டிடங்களைக் கட்டினான். சிறந்த சைத்ரீகர்களுக்கு ஊக்கமளித்தான். அவர்களுள் குறிப்பிடத் தகுந்தவர் உஸ்தாத் மன்ஸர். நினைவுக் குறிப்புகள் கொண்ட நூல் ஒன்றை ஜஹாங்கீர் இயற்றியதோடு பல நூலாசிரியர்களையும் ஆதரித்தான். தினமும் ஏழைகளுக்குப் பேட்டியளித்து அவர்களது குறைகளைக் கேட்டறிவது அவனது வழக்கமாக இருந்தது.

இக்காலத்தில், தங்களது அதிகாரம் வெகுவாக க்ஷீணித்து விட்டிருந்த போதிலும் தென்னாட்டில் விஜய நகர மன்னர்கள் அறிஞர்களுக்குத் தங்கள் ஆதரவைத்தொடர்ந்து அளித்து வந்தனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் அப்பய்ய தீக்ஷிதர். சைவ, அத்வைத தத்துவம் குறித்துப் பல நூல்கள் எழுதிப் புகழ் பெற்றவர் அவர்.

ஜஹாங்கீரின் மகனான ஷா ஜஹான் பதவிக்கு வந்த போது அகமது நகரின் ஒரு பகுதி, பீடார், கோல்கொண்டா, பீஜப்பூர், இந்தியாவின் தென்கோடிப் பகுதிகள் ஆகியவையே முகலாய சாம்ராஜ்யத்துக்கு உட்படாது இருந்தன. ஷாஜஹான் அகமது நகரைக் கைப்பற்றி பீஜப்பூரையும் அடி பணியச் செய்தான். தட்சிணத்தில் நிர்வாகத்தை அமைக்க அனுப்பப்பட்ட அவன் மகன் ஔரங்கசீபோ சிறந்த முறையில் அதனை அமைத்ததோடு பீடாரையும் கைப் பற்றி கோல்கொண்டாவையும் அடிபணியச் செய்தான்.

ஷாஜஹானுடைய காலத்தில் அக்பரும் ஜஹாங்கீரும் கடைப்பிடித்து வந்த கொள்கைகள் அனைத்தும் மாற்றப் பட்டன. ஹிந்துக்கள் கொடுமைப் படுத்தப்பட்டனர். புதிய கோயில்களைக் கட்ட அவர்கள் அனுமதிக்கப் படவில்லை.

ஷாஜஹான் சிறந்த கலாரசிகன். அவனிடம் ஏழு அழகிய சிம்மாதனங்கள் இருந்தன. உலக அதிசயங்களுள் ஒன்றாகக் கருதப்படும் மயிலாசனம் அவற்றுள் முக்கியமானது. அவனது மனைவி மும்தாஜ் மரணமடைந்தபோது அவளின் நினைவாக உன்னதமான தாஜ்மஹாலை அவன் கட்டினான். நுணுக்கமானகலை அழகில் தாஜ் மஹால் வேறு எந்தக் கட்டிடத்தையும் விடச் சிறந்து விளங்குகிறது. ஷாஜஹானின் காலத்தில் முகலாய வண்ணச் சித்திரப்பாணி அதன் உச்ச நிலையை எட்டியது. ஆக்ராவிலிருந்து தில்லிக்குத் தன் தலை நகரை மாற்றினான் ஷாஜஹான். அந்தக் காலத்தில் எந்த மன்னனுடையதைக் காட்டிலும் ஷாஜஹானின் அரசவை மகத்தானதாக விளங்கியது.

ஷாஜஹானது காலத்தில், எஞ்சியிருந்த விஜயநகர சாம்ராஜ்யத்தின் பகுதிகளைக் கைப்பற்ற பீஜப்பூர் முயன்று வந்தது. கி.பி. 1565-ல் விஜயநகர ஆட்சி தோல்வியுற்றபோது செஞ்சி, தஞ்சை, திருச்சி போன்ற தொலைதூரப் பகுதிகளில் விஜயநகரத்தின் ராஜப் பிரதிநிதிகளாக இருந்துவந்த நாயக்கர்கள் அந்தந்த பகுதிகளின் சுதந்திர மன்னர்கள் ஆனார்கள். மைசூரிலும் அவ்வாறே நிகழ்ந்தது. இவற்றையும் வெற்றிகொள்ள பீஜப்பூர் சுல்தான் முயன்றான். ஒருசில அவனது அதிகாரத்துக்கு உட்பட்டன.

நாயக்கர்கள் பெரும் கட்டிடங்களை எழுப்புவதில் ஒருவருக்கொருவர் போட்டியிட்டு நின்றனர். செங்கோட்டை, மதுரைமீனாட்சி கோயில் திருமலை நாயக்கர் அரண்மனை ஆகியவை இக் காலத்தில் எழுந்த சிறந்த கட்டிடங்கள்.

ஷாஜஹான் மரணமடைவதற்கு ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னதாகவே அவனது புதல்வர்கள் நான்கு பேரும் அரசுரிமைக்காக ஒருவரோடொருவர் சச்சரவிடத் தொடங்கினார்கள். அவர்களுள் ஔரங்கசீபே இதர மூவரையும் வென்று, தந்தையை நிர்வாகப் பொறுப்பிலிருந்து விலக்கிவிட்டு கி. பி. 1659-ல் தன்னை சக்கரவர்த்தியாகப் பிரகடனப்படுத்திக் கொண்டான்.

பிரிட்டன் தயாரித்த சாமான்களைச் சேமித்து வைப்பதற்கான கிடங்கு கி. பி. 1608-ம் ஆண்டிலேயே ஸூரத் நகரில் கட்டப்பட்டிருந்தது. ஆனால் ஆங்கிலேயரின் இந்திய வியாபாரத் தொடர்புகளின் முன்னேற்றத்தைத் தடை செய்வதில் போர்ச்சுகீசியர் மிகவும் தீவிரமாக இருந்தனர். இதன் காரணமாக ஆங்கிலேயருக்கும் போர்ச்சுகீசியருக்கும் அநேகக் கடற் போர்கள் நிகழ்ந்தன. இவற்றில் பிரிட்டன் வெற்றி பெறவே போர்ச்சுகீசியரின் எதிர்ப்பு முடிவுபெற்றது. ஜஹாங்கிரின் அவைக்கு தூதுவனாக வந்த ஸர். தாமஸ்ரோ பாதுஷாவின் சிறந்த நண்பன் ஆனான். கி. பி. 1628-ல் ஆங்கிலேயர் மசூலிப்பட்டணத்தில் தொழிற்கூடங்களை

அமைத்தனர். 1633-ல் பூரிக்கு அருகாமையில் ஒரு வியாபார ஸ்தலம் நிறுவப்பட்டது. 1640-ல் கடற்கரை அருகே சந்திரகிரி மன்னனிடமிருந்து சிறிதளவு நிலத்தை ஆங்கிலேயர் வாடகைக்குப் பெற்றனர். அந்த நிலத்தில்தான் சென்னை நகருக்கு அஸ்திவாரம் இடப்பட்டது. விரைவில் அது ஆங்கிலேயரின் கிழக்குக் கடற்கரைத் தலைமைக் காரியாலயமாகவும் வளர்ச்சி பெற்றது. 1651-ல் மற்றொரு ஆங்கில வியாபார ஸ்தலம் நிறுவப்பட்டது. கிழக்குக் கடற்கரையில் ஆங்கிலேயருக்குப் போட்டியாக விளங்கிய டச்சுக்காரர்கள் விரைவில் அதை விடுத்து இந்து மகாசமுத்திரத்தில் இருந்த தீவுகளுக்குத் தங்கள் நடவடிக்கைகளை மாற்றிக் கொண்டனர்.

பதவியேற்றதும் முதல் வேலையாகத் தட்சிணத்தை வெற்றிகொள்வதில் தன் கருத்தைச் செலுத்தினான் ஔரங்கசீப். பீஜப்பூரை கி. பி. 1685-ம் ஆண்டிலும் கோல்கொண்டாவை 1687-ம் ஆண்டிலும் தன் ராஜ்யத்தினுள் இணைத்தான் அவன். பீஜப்பூர் சுல்தான்கள் தமிழ்—கன்னடப் பகுதிகளின் சக்கரவர்த்திகளாகத் தங்களைக் கருதி வந்தனர். எனவே இந்தியா முழுவதையும் ஆண்ட முதல் முகலாய சக்கரவர்த்தியாக ஔரங்கசீப் கருதப்பட்டான். கி. பி. 1707-ம் ஆண்டில் அவனது மரணத்துக்குப் பின்னர் முகலாய சாம்ராஜ்யம் சிதறுண்டது. எனவே அவனே இந்தியாவின் கடைசி முகலாய சக்கரவர்த்தியாகவும் விளங்கினான்.

ஔரங்கசீப் மிகச் சிறந்த பக்திமான். மிக எளிமையான வாழ்க்கையை மேற்கொண்டான். ஆனால் அவன் தீவிரமான முஸல்மானாக விளங்கியதால் ஹிந்துக்களை அவன் மிகவும் கொடுமைப்படுத்தினான். அவர்கள்மீது பிரத்தியேகமான வரிகளை விதித்து, அவர்களது கோயில்களை இடித்துத் தள்ளினான். அவற்றுள் குறிப்பிடத்தக்கது காசி விஸ்வநாதர் ஆலயம்.

எனவே ஹிந்துக்கள் அவனுக்கெதிராகத் தொடர்ந்து புரட்சி செய்து வந்தனர். ஜாட்டுக்களும், ஸத்நாமிக்களும்,

மேவார் — மார்வார் ராஜபுத்திரர்களும் அவனுக்கெதிராகப் போர்க்கொடி எழுப்பினர். தட்சிணத்தில் மராத்தியர்கள் புதிய அரசைத் தோற்றுவித்து அவனுக்கு இடைவிடாத தொல்லைகளை அளித்தனர். முஸ்லீம் ஆட்சியிலிருந்து இந்தியாவை விடுவிக்கும் திட்டங்களை சிவாஜி உருவாக்கினன். அவனுக்கு மதபோதனைகள் அளித்துவந்த ஆசிரியர்களான ராமதாஸரும், துகாராமும் இந்த முயற்சிகளில் சிவாஜிக்குப் பெரும் ஊக்கம் அளித்தார்கள். மராத்திய விவசாயிகளைக் கொண்டு ஒரு ராணுவத்தைத் தோற்றுவித்து விரைவில் அவர்களைச் சிறந்த போர் வீரர்களாகபயிற்றுவித்தான். போதிய அளவு கடற்படையையும் அவனல் சேகரிக்க முடிந்தது. எனவே அவனல் பிஜப்பூர் சுல்தானையும் முகலாய சக்ரவர்த்தியையும் ஒரே நேரத்தில் எதிர்த்து நிற்க முடிந்தது. சிவாஜி மகாராஜாவாக முடிசூடியது கி.பி. 1664-ம் ஆண்டில். பதினறு ஆண்டுகளுக்குப் பின்னர் அவன் மரண மடைந்த போது சாத்பூரா மலைக்குத் தெற்கே இருந்த பகுதிகள் அனைத்தும் அவனது அதிகாரத்தின் கீழ் இருந்தன.

சிவாஜியின் மரணத்துக்குப்பின் அவனது மகன் சாம்பாஜியும் போரில் கொல்லப்பட்டான். சாம்பாஜியின் மகன் ஸாஹு கைது செய்யப்பட்டு தில்லியில் சிறை வைக்கப் பட்டான்.

இங்கிலாந்து மன்னன் இரண்டாம் சார்லஸ் போர்ச்சுகீசிய இளவரசியான காதரீனை மணந்து கொண்ட போது வரதட்சிணையின் ஒரு பகுதியாக பம்பாய் அவனுக்களிக்கப் பட்டது, டச்சுக்காரருக் கெதிராகத் தங்களுக்கு ஆங்கிலேயர் உதவும் பொருட்டே போர்ச்சுகீசியர் அவ்வாறு செய்தனர். ஆண்டொன்றுக்கு பத்து பவுன்கள் பெற்றுக்கொள்வதாக ஒப்புக் கொண்டு இங்கிலாந்து மன்னன் பம்பாயை கிழக்கிந்தியக் கம்பெனிக்கு விற்று விட்டான். அதுமட்டுமின்றி கம்பெனி சொந்தமாகத் தேவையான காசுகள் வெளியிடவும், அதனுடைய அதிகாரத்துக்கு உட்பட்ட பகுதிகளில் நீதி நிர்வாகத்தை மேற் கொள்ளவும் அனுமதிக்கப்பட்டது.

சுங்கவரிகள் சம்பந்தமாக கம்பெனிக்கும் ஔரங்கசீபின் அதிகாரிகளுக்கும் இடையே வங்காளத்தில் வழக்குகள் எழுந்தன. சிட்டகாங்கைக் கைப்பற்ற இரண்டாம் ஜேம்ஸ் மன்னன் கி. பி. 1685-ம் ஆண்டில் பன்னிரண்டு போர்க் கப்பல்களை அனுப்பினான். ஆனால் இந்த முயற்சி தோல்வி யுற்றது. ஆங்கிலேயர் வங்காளத்தை கைவிட வேண்டிய தாயிற்று. ஔரங்கசீபின் அதிகாரிகள் ஸூரத் நகரையும் கைப்பற்றினர். முடிவில் ஆங்கிலேயர் முகலாய சக்ரவர்த்தி யுடன் சமாதானம் செய்து கொண்டனர்.

கி. பி. 1690-ல் கல்கத்தா நகரம் நிர்மாணிக்கப்பட்டது. விரைவில் ஆங்கில சாம்ராஜ்யத்தின் இரண்டாவது பெரிய நகரமாகவும் அது வளர்ச்சி பெற்றது.

# 17. கி. பி. 1714 - கி. பி, 1771

ஔரங்க சீபின் மரணத்துக்குப் பின்னரும் மராத்தியர்கள் தில்லியின் ஆட்சியாளருக்குத் தொடர்ந்து தொல்லைகள் கொடுத்து வந்தனர். அவர்களை சாமாதானப் படுத்தும் வகையில் ஸாஹு விடுவிக்கப்பட்டான். சிறை மீண்ட ஸாஹு மராத்தியர்களின் மன்னனாகி ஸதாராவைத் தனது தலை நகராகக் கொண்டான்.

அவனது பேஷ்வாவாக (பிரதம மந்திரி) இருந்தவன் பாலாஜி விஸ்வநாத். அவன் மிகுந்த திறமைசாலி. மகாராஷ்டிரத்தின் பூரண நிர்வாகப் பொறுப்பும் அவன் வசமே இருந்தது .அவன் மராத்தியரின் அதிகாரத்தைப் பெருக்கினான். கி. பி. 1720-ல் அவனது மரணத்துக்குப் பின் அவன் மகன் பாஜிராவ் பேஷ்வா ஆனான். தந்தையைக் காட்டிலும் திறமை மிக்கவனாக விளங்கினான் பாஜிராவ். இந்தியா முழுவதும்

மராத்திய சாம்ராஜ்யத்தை விஸ்தரிக்கும் திட்டம் ஒன்றை உருவாக்கினன் அவன். அவனுக்கு எதிராக இருந்தவன் முகலாய சக்கரவர்த்தியின் நைஜாமாக ஹைதராபாத்தில் ஆட்சி புரிந்த ஆஸஃப் ஜா.

குஜராத், மால்வா, பண்டல் கண்ட் ஆகிய இடங்களில் தன் அதிகாரத்தைப் பரப்பிய பாஜி ராவ் அடுத்து தில்லியைத் தாக்க முயன்ருன். ஆனல் நைஜாம் அவனுக்கெதிராகக் கிளம்பவே அத்திட்டத்தைக் கைவிடும்படி ஆயிற்று. போபாலில் நைஜாமைத் தோற்கடித்து நர்மதைக்கும் சம்பாலுக்கும் இடையே உள்ள பிரதேசங்களைத் தன் ராஜ்யத்துடன் இணைத்தான் பாஜிராவ். அது மட்டும் இன்றி ஐம்பது லட்சம் ரூபாய்களையும் தில்லி சக்கரவர்த்தியின் பொக்கிஷசாலை அவனுக்கு அளிக்க வேண்டியதாயிற்று.

கி.பி. 1739-ல் நாதிர் ஷா தில்லியைச் சூறையாடிச் சென்ருன். அளவற்ற செல்வங்களுடன் மயிலாசனத்தையும் எடுத்துச் சென்ருன் அவன். தில்லியின் அதிகாரம் இப்போது பூஜ்யத்தைத் தொட்டது. இச் சந்தர்ப்பத்தை பாஜிராவினல் பயன் படுத்திக் கொள்ள முடியவில்லை. இது நிகழ்ந்து ஓராண்டுக்குள் அவன் மரணம் அடைந்து விட்டான்.

சிறந்த மராத்திய வீரர்களான கெயிக்வார், சிந்தியா, ஹோல்கார் போன்றவர்கள் பாஜிராவிடம் பணி புரிந்து வந்தவர்கள். பின்னர் அவர்கள் பரோடா, குவாலியர், இந்தூர் ஆகிய இடங்களில் தங்களுக்கெனத் தனி ஆட்சியை ஸ்தாபித்துக் கொண்டார்கள். பாஜிராவுக்குப் பின்னர் அவன் மகன் பாலாஜி பாஜி ராவ் பேஷ்வா ஆனன்.

கி.பி. 1748-ல் நைஜாம் மரணமடைந்தான். அதே நேரத்தில் ஆற்காடு நவாபின் மரணமும் நேர்ந்தது. ஹைதராபாத்திலும் ஆற்காட்டிலும் வாரிசுரிமைகள் குறித்து சிக்கல்கள் எழுந்தன. சென்னையிலிருந்த ஆங்கிலேயர் ஒரு சாரரை ஆதரித்தனர். பாண்டிச்சேரியிலிருந்த பிரெஞ்சுக்காரர்கள் மற்ருெரு சாரருக்குத் தங்கள் ஆதரவை அளித்த

னர். போட்டியாளருக்கிடையே நிகழ்ந்த போர்களில் அவர் களும் பங்கேற்றனர். பிரெஞ்சுக்காரர்களுக்குத் தலைவனாக இருந்தவன் பாண்டிச்சேரியில் கவர்னரான டூப்ளே. ஆங்கி லேயரின் தரப்பில் தலைமை வீரனாக விளங்கியவன் கிளைவ். தொடர்ந்து நிகழ்ந்த மோதலின் முடிவில் ஆங்கிலேயரே வெற்றி பெற்றனர். அவ்வெற்றிக்கு கிளைவின் தீரமும் சாமர்த்தியமும் பெருமளவில் காரணமாக விளங்கின. அதன் விளைவாகத் தென் இந்தியாவில் ஆங்கிலேயரின் செல்வாக் குப் பரவியது. ஆற்காடு நவாப் பெயரளவில் அரசனாக இருந் தான்.

தெற்கே இந் நிகழ்ச்சிகள் நடைபெற்று வந்த போது, பாலாஜி பாஜிராவ் (கி.பி. 1740—கி.பி. 1761) மராத்தியரின் அதிகாரத்தை வடஇந்தியா முழுவதும் விரிவடையச்செய்யும் முயற்சிகளில் ஈடுபட்டிருந்தான். தில்லியை நிரந்தரமாகத் தன் அதிகாரத்தின் கீழ் கொண்டுவர எண்ணித் தன் படையை அனுப்பி வைத்தான் பாலாஜி. நாதிர்ஷாவுக்குப் பின்னர் வந்த அஹமது ஷா துர்ரானி இதை முழு மூச்சுடன் எதிர்த்தான். வட இந்திய முஸ்லீம் அரசுகள் அனைத்தும் ஒரு மித்து இம் முயற்சியில் ஒத்துழைத்தன. முடிவில் பானிபட் டில் (கி.பி. 1761) நிகழ்ந்த போரில் மராத்திய ராணுவம் நிர் மூலமாக்கப் பட்டது. தில்லியில் மராத்திய சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்கும் முயற்சிகளுக்கு இத் தோல்வி முற்றுப் புள்ளி வைத்தது.

கி.பி. 1740-ல் வங்காளம் தில்லியின் அதிகாரத்திலிருந்து பிரிந்தது. அலிவர்திகான் சுதந்திர ஆட்சியை அங்கு ஸ்தாபித்தான். தில்லியின் அதிகாரத்தில் வங்காளம் இருந்த காலத்தில் ஆங்கிலேயர் சில பிரத்தியேக வியாபார சலுகை களைப் பெற்றிருந்தனர். கி.பி. 1756-ல் சிராஜ் உத்தௌலா வங்காளத்தின் நவாபாக ஆனபோது இந்தச் சலுகைகளை ரத்து செய்ததோடு கல்கத்தாவிலிருந்த ஆங்கிலேயரின் கோட்டையையும் தாக்கிக் கைப்பற்றினான், இதன் விளைவாக ஏற்பட்ட போரில் ஒரு சிறிய படையை வைத்துக் கொண்டு

கிளேவ் பிளாஸியில் நவாபைத் தோல்வியுறச் செய்தான் (கி. பி.1757). சிராஜ் உத் தௌலாவுக்குப் பின்னர் ஆட்சிக்கு வந்தவராலும் ஆங்கிலேயரை எதிர்த்து நிற்க முடியவில்லை. அதன் பின்னர் வங்காளம், பீஹார், மிட்னுப்பூர் ஆகிய பிரதேசங்களின் உண்மையான அதிகாரம் கிழக்கிந்திய கம்பெனி வசம் வந்தது. நவாப் பெயருக்குத்தான் நவபாக இருந்தான்!

புனுவில் மாதவராம் பேஷ்வாவாக ஆட்சி புரிந்து வந்தான். பானிபட் தோல்வி அவன் உள்ளத்தில் தில்லியைக் கைப்பற்றும் ஆவலைத் தணித்திருக்கவில்லை. புதிய நைஜமான நைஜாம் அலியைத் தோல்வியுறச் செய்து அவனது ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் சிலவற்றைக் கைப் பற்றினுன் மாதவராவ்.

மைசூர் மன்னனின் கீழ் ஒரு அதிகாரியாகப் பணியாற்றி வந்த ஹைதர் அலி அப்போது மைசூரின் ஆட்சியைக் கைப் பற்றியிருந்தான். எனவே தென் இந்தியாவில் தங்களது அதிகாரத்தைப் பெருக்குவதில் மூன்றுபேர் ஈடுபட்டிருந்த னர்—ஹைதர் அலி, நைஜாம், மராத்தியர்கள். இம் மூவருமே சில சமயங்களில் பிரிட்டிஷாரின் உதவியை நாடினுர்கள். மற்ற சமயங்களில் ஒன்று சேர்ந்து அவர்களை எதிர்ப்பதில் முனைந்தனர். கி. பி. 1771-ல் மராத்தியர்கள் மைசூரின்மீது படையெடுத்தனர். அப்போது பிரிட்டிஷார் ஹைதர் அலிக்கு உதவ மறுத்தனர். அது முதல் அவன் அவர்களது பரமவைரி ஆகிவிட்டான்.

மாதவராவ், ஹைதரைத் தோற்கடித்து அவனிடமிருந்து கப்பம் வசூலித்தான். அடுத்து அவன் ஹிந்துஸ்தானத்து ராஜபுத்திரர்களுக்கு எதிராகப் படை எடுத்துச் சென்று அவர்களிடமிருந்தும் கப்பம் பெற்றுன். அடுத்து தில்லியின் பாதுஷாவைத் தன்னுடைய பாதுகாப்பின் கீழ் இருக்கும்படி யாகத் தூண்டினுன். இவ்வாறு இந்தியாவில் மராத்தியரின் செல்வாக்கு உச்ச நிலையை எட்டியது. ஆனுல் கி. பி. 1771-ல்

மாதவராவுக்கு மரணம் சம்பவித்தது. அதன் பின்னர் பீஷ்வார்களின் அதிகாரம் க்ஷீணிக்கத் தொடங்கியது.

# 18. கி. பி. 1771 - கி. பி. 1818

வியாபாரம் செய்ய வந்த கிழக்கிந்தியக் கம்பெனியின் பணியாட்கள் பரந்த பிரதேசங்களின் ஆட்சிப் பொறுப்பை ஏற்க நேர்ந்தது. ஆயினும் ஆட்சி செலுத்த எந்தவிதத் தகுதியையோ அல்லது பயிற்சியையோ அவர்கள் பெற்றிருக்கவில்லை. எனவே வங்காளமும், தென் இந்தியாவின் சில பகுதிகளும் அவர்களது அதிகாரத்தின் கீழ் வந்தபோது அவர்களது நிர்வாகம் ஊழல் மலிந்து விளங்கியது. கம்பெனி அதிகாரிகள் தவறான வழிகளில் முறையற்றுப் பணம் சேர்க்கத் தொடங்கினார்கள். கிழக்கிந்தியக் கம்பெனியின் விவகாரங்களையும் தங்களது நிர்வாகத்தின் கீழிருந்த மக்களின் நிலை குறித்தும் அவர்கள் சிறிதும் கவலைப்படவில்லை.

கி. பி. 1770-ல் வங்காளத்தில் கடுமையான பஞ்சம் தோன்றியது. கம்பெனி அதிகாரிகள் சரிவர கவனம் செலுத்தாத காரணத்தால் ஏராளமான மக்கள் மரணமடைந்தனர். வங்காளம் பாழடைந்து பரிதவித்தது. நிலைமையைச் சரிப்படுத்த வாரன் ஹேஸ்டிங்ஸ் வங்காளத்தின் கவர்னராக நியமிக்கப்பட்டான்.

கிழக் கிந்தியக் கம்பெனியின் கஜானா நிரம்பி வழிவதாக இங்கிலாந்தில் இருந்த மக்கள் எண்ணிக் கொண்டிருந்தனர். எனவே தனது வருடாந்திர லாபத்திலிருந்து ஒரு பகுதியை கம்பெனி செலுத்த வேண்டும் என பிரிட்டிஷ் பார்லிமெண்ட் தீர்மானித்தது. ஆனால் உண்மையில் கிழக்கிந்தியக் கம்பெனி அப்போது நஷ்டமடைந்த நிலையில் பணத் தேவையின் காரணமாக தத்தளித்துக் கொண்டிருந்தது.

கம்பெனி வியாபாரிகளுக்குப் பதிலாகப் பிரிட்டிஷ் பார்லி மென்டே இந்தியாவில் ஆங்கிலேயர் பெற்றிருந்த பிரதேசங் களின் நிர்வாகத்தை ஏற்க வேண்டும் என்ற எண்ணம் இங்கிலாந்தில் வலுப்பெறத் தொடங்கியது. எனவே கி.பி. 1784-ல் அரசாங்கக் கட்டுப்பாடு குழு ஒன்று நியமிக்கப் பட்டு கம்பெனி அதன் அதிகாரத்துக்கு உட்பட்டதாகச் செய்யப்பட்டது. பிரிட்டிஷ் இந்தியாவின் நிர்வாகத் தலை வர் கவர்னர் ஜெனரல் என அழைக்கப்பட்டார். அவரது தலைமைக் காரியாலயம் கல்கத்தாவில் அமைக்கப்பட்டது. அவரது அதிகாரத்தின் கீழ் சென்னை, பம்பாய் கவர்னர்கள் இயங்கினார்கள். அதிகாரிகளை கிழக்கிந்தியக் கம்பெனியே நியமித்தது. ஆனால் அதனுடைய செயல் முறைகள் அனைத் தும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கட்டுப்பாடு குழுவின் மேற் பார்வையிலேயே இயங்கின.

வாரன்ஹேஸ்டிங்ஸ் இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் ஆனான்.

மாதவராவின் மரணத்துக்குப் பின்னர் மராத்தியர்கள் இரண்டு கட்சியினராகப் பிரிந்தார்கள். மராத்தியருக்கிடையே எழுந்த இந்தப் பூசலுக்குள் பிரிட்டிஷார் தலையிட்டார்கள். அதன் விளைவாக நிகழ்ந்த போர் ஆங்கிலேயருக்கு அவமதிப் பையே கொண்டு வந்தது. அவர்கள் எந்தவிதமான பயனை யும் அடையவில்லை.

கி. பி. 1779-ல் நைஜாம், மராத்தியர்கள், ஹைதர் அலி, ஆகிய மூவரும் ஒன்று சேர்ந்தனர். அவர்களை இவ்வாறு இணைத்த லட்சியம் இந்தியாவின் ஆங்கில அதிகாரத்தை அழித்து விடுவது. மராத்தியர்களுள் ஒருவனை நாகப்பூரின் போன்ஸ்லே ராஜாவை ஹேஸ்டிங்ஸ் பணம் கொடுத்து வசப்படுத்தினான். அவனை விலைகொடுத்து வாங்கி விட்ட தாகவும் கொள்ளலாம். இந்தியாவின் உதவியைக் கொண்டு புனாவின் அதிகாரிகளுடன் சமரசம்பேசினான். குண்டூரை அளித்து நைஜாமைச் சரிக்கட்டினான்.

இதனிடையில் ஆற்காடு நவாப்பின் எல்லைக்குள் ஹைதர் அலி படையெடுத்துச் சென்றான். எனவே ஹேஸ்டிங்ஸ் ஹைதர் அலியுடன் நேரிடையான போரில் இறங்கினான். போரில் ஹைதர்அலி மரணமடைய அவன் மகன் திப்புவுக்கும் ஹேஸ்டிங்ஸுக்கும் சமரசம் ஏற்பட்டது.

ஹேஸ்டிங்ஸ் நிகழ்த்திய இப்போர்களினால் கிழக்கிந்தியக் கம்பெனி எந்தப் பிரதேசத்தையும் பெறவில்லை. மாறாக அதிக அளவில் பொருள் நஷ்டமே ஏற்பட்டது.

கார்ன்வாலிஸ் கி.பி. 1785-ம் ஆண்டிலிருந்து கி.பி. 1793 வரை இந்தியாவில் கவர்னர் ஜெனரலாக இருந்தான். திப்பு சுல்த்தானுக்கு எதிராக பேஷ்வா, நைஜாம் ஆகியோருடன் கூட்டுச்சேர்ந்தான் அவன். இரண்டாண்டுகள் அவர்களிடையே போர் நடந்தது. திப்புவின் தலைநகரான ஸ்ரீரங்க பட்டணம் வரை கூட்டு ராணுவம் வந்தபோது அவர்களிடையே சமாதானம் ஏற்பட்டது. அதன் விளைவாக குண்டூர் மலபார், சேலம், மதுரை ஜில்லாக்களின் சிலபகுதிகள் ஆங்கில அதிகாரத்துக்குள் வந்தன.

இந்தக் காலத்தில் மஹதாஜி சின்ஹா வலிமை மிக்க மராத்தியத் தலைவனாக விளங்கினான். ராஜபுதனம் அவனது அதிகாரத்தின் கீழ் இருந்தது. வட இந்தியாவில் அவனது செல்வாக்கு பெருமளவில் பரவியிருந்தது. தில்லி அரசவையில் மராத்தியரின் பிரதிநிதியாக அங்கம் வகித்த சின்ஹா நீண்ட காலம் உயிர் வாழவில்லை. அப்படி அவன் வாழ்ந்திருந்தால் பிரிட்டிஷாருக்கு எதிராக வலுமிகுந்த கூட்டணி ஒன்றை அவன் தோற்றுவித்திருக்கக் கூடும்.

கி.பி 1798-ல் வெல்லெஸ்லி கவர்னர் ஜெனரல் ஆனான். அவனது காலத்தில் திப்பு, நைஜாம், சிந்தியா, ஹோல்கார், போன்ஸ்லே ஆகியோர் முக்கிய அரசர்களாக இருந்தனர். அப்போது இங்கிலாந்து பிரான்ஸுடன் ஜீவமரணப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்தது.

பிரெஞ்சுப் புரபுக்கள் நீண்ட காலமாக அந்நாட்டு விவசாயிகளைக் கொடுமைப்படுத்தி அடக்கி ஆண்டு வந்தனர். எனவே மக்கள் ஆட்சியாளருக் கெதிராக கி.பி, 1789 ல் புரட்சி செய்து அரசனையும், அரசியையும், இதர பிரபுக்களையும் கொலை செய்தனர், பழைய ஆட்சி முறையை அழித்து விட்டு குடியரசை பிரான்ஸில் நிறுவினார்கள். பிரெஞ்சு குடியரசு விரைவில் இதர ஐரோப்பிய நாடுகளுடன் போரில் ஈடுபட நேர்ந்தது. இந்தப் போரில் தன்னுடைய திறமையின் காரணமாக முன்னணிக்கு வந்தவன் நெப்போலியன். அவன் பிரான்ஸுக்கு அநேக வெற்றிகளைத் தேடித்தந்தான். இங்கிலாந்து அவனது முதல் எதிரியாக விளங்கியது. ஆங்கிலேயரை அவர்களது கிழக்கத்திய குடியேற்றங்களிலிருந்து விரட்டிவிட வேண்டும் என்பது அவனுடைய லட்சியமாக விளங்கியது. அதை அடையும் வகையில் அவன் திப்புவுடன் தொடர்பு கொள்ளலானன்.

இந்திய மன்னர்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டு வந்தனர். அவர்கள் ஒன்று சேர்ந்து முனைந்திருந்தால் எளிதில் பிரிட்டனின் அதிகாரத்தை இந்தியாவிலிருந்து விரட்டி அடித்திருக்க முடியும். இதை நன்கு உணர்ந்திருந்த வெல்லெஸ்லி இந்திய மன்னர்களின் அதிகாரத்தைப் படிப்படியாகக் குறைக்கப் புதிய வழியொன்றைக் கண்டுபிடித்தான். ஒவ்வொரு அரசனையும் தனிப்பட்ட முறையில் பிரிட்டனுடன் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளக் கட்டாயப் படுத்துவதே அது.

அந்த ஒப்பந்தத்தின் மூலம் பொதுவாக இந்திய மன்னன் சுதந்திர அரசனுகத் தன்னுடைய உள் நாட்டு நிர்வாகத்தை நடத்தி வருவான். அவனது அரசவைக்கு ஆங்கில 'ரெஸிடென்ட்' ஒருவன் நியமிக்கப்படுவான். அவன் மன்னனுக்கு அரசாங்க நிர்வாகம் குறித்து அவ்வப்போது ஆலோசனைகள் கூறுவான். மன்னனுடைய செலவில் கிழக்கிந்தியக் கம்பெனி அவனது ராஜ்யத்தில் ராணுவத்தை நிர்வகித்து

வரும். இந்த ராணுவச் செலவுக்காக மன்னன் பணமோ அல்லது தனது நாட்டின் ஒரு சிறு பகுதியையோ ஆங்கிலேயருக்கு அளித்து விட வேண்டும்.

பிரெஞ்சுக்காரர்கள் நைஜாமின் ராணுவத்திற்குப் பயிற்சி அளித்து அதனை நிர்வகித்துவந்தார்கள். வெல்லெஸ்லி முதலில் இந்தப் பிரெஞ்சு அதிகாரிகளை விலக்கி விடும்படி நைஜாமைத் தூண்டிவிட்டான். இத்தகைய ஒப்பந்தத்துக்கு திப்பு உடன்படமாட்டான் என்பது வெல்லெஸ்லிக்குத் தெரிந்திருந்தது. எனவே அவன் திப்புவின் மீது போர் தொடுத்தான். இரண்டு மாதங்களுக்குள் ஸ்ரீரங்கப்பட்டணம் பிடிக்கப்பட்டது. போரில் திப்பு மரணமடைந்தான். அவனது ராஜ்யத்தில் தங்களுக்கு வசதியான பகுதிகளை ஆங்கிலேயர் எடுத்துக் கொண்டனர். வேறு சில ஜில்லாக்கள் நைஜாமுக்கு அளிக்கப்பட்டன. பழைய அரச பரம்பரையில் பிறந்த குழந்தை ஒன்று எஞ்சியிருந்த மைசூர் ராஜ்யப் பகுதிகளுக்கு அரசனாக பிரகடனப் படுத்தப்பட்டது.

நைஜாமின் ராஜ்யத்தில் நிர்வகிக்கப்பட்ட ராணுவத்தின் செலவுக்காக அவனுக்களிக்கப்பட்ட பிரதேசங்களை ஆங்கிலேயர் பின்னர் திரும்ப எடுத்துக் கொண்டார்கள். இவ்வாறே ரோஹில் கண்டையும், கங்கைக்கும் யமுனைக்கும் இடையே இருந்த வட ஜில்லாக்களையும் ஔத்தின் நவாப் ஆங்கிலேயரிடம் இழக்க நேர்ந்தது.

பிரிட்டனுடன் ஒப்பந்தம் செய்து கொண்ட இந்திய மன்னர்கள் கவலையற்று சுக வாழ்வு வாழத் தொடங்கினர்கள். ராஜ்யத்தின் பாதுகாப்பு ஆங்கிலேயர் பொறுப்பில் இருந்தது. மக்களிடமிருந்து எழக்கூடிய தொல்லைகளையும் அவர்களே சமாளித்துக் கொள்வார்கள் என்ற நம்பிக்கையில் அவர்கள் வாழ்க்கையை அனுபவித்துத் தங்கள் செல்வத்தை அழிக்கத் தொடங்கினர்கள்.

வேறு வழிகளிலும் ஆங்கில ஆதிக்கத்தைப் பெருக்கினன் வெல்லெஸ்லி. தகுந்த சமயங்களில் மன்னர்களுக்குப்பொருள்

உதவிகள் செய்து அவர்கள் ஆண்ட பிரதேசங்களில் தனது அதிகாரத்தைப் பெருக்கினுன் அவன். தஞ்சைக்கு வாரிசு யார் என்பதில் சிக்கல் எழுந்தது. அந்தப் பகுதியை கம்பெனியின் ஆதிக்கத்துக்குள் கொண்டு வந்து அந்தப் பிரச்னைக்கு முடிவு கட்டினுன். அதே ஆண்டில் ஸுரத் நவாப் மரணமடைந்தான்! உடன் ஸுரத்தும் ஆங்கில நிர்வாகத்துக்குள் இணைக்கப்பட்டது. ஆற்காடு நவாப் திப்புவுக்கு நட்பு பாராட்டிக் கடிதங்கள் எழுதியிருந்தான். எனவே கி.பி. 1801-ல் அவனது ஆட்சிக்கு உட்பட்டிருந்த பிரதேசங்கள் கம்பெனியின் அதிகாரத்துக்குக் கொண்டுவரப்பட்டன.

மராத்திய மன்னர்கள் தங்களுக்கிடையே சண்டையிட்டு வந்தனர். அவர்களுள் ஒருவனுன இரண்டாம் பாஜிராவை துணை ஒப்பந்தத்தில் கையெழுத்திடச் செய்தான் வெல்லெஸ்லி. சிந்தியாவும் போன்ஸ்லேயும் ஒன்று சேர்ந்தனர். ஹோல்காரும் கெய்க்வாரும் விலகி நின்றனர். வெல்லெஸ்லி போன்ஸ்லேயை வெற்றி கொண்டு அவனை ஒப்பந்தத்தில் கையெழுத்திடச் செய்தான். ஹோல்காரிடம் அவன் எதுவும் முயற்சி செய்யுமுன் திரும்ப இங்கிலாந்துக்கு அழைக்கப்பட்டான் வெல்லெஸ்லி.

வெல்லெஸ்லி இங்கிலாந்துக்குத் திரும்பியபோது கிழக்கிந்தியக் கம்பெனியின் கஜாளு காலியாகியிருந்தது. அவனுக்குப் பின் கவர்னர் ஜெனரலாக வந்தவர்கள் ஆங்கில ஆதிக்கத்தை விரிவடையச் செய்ய முனையவில்லை. ஹோல்காரும், சிந்தியாவும் தங்கள் அதிகாரத்தைப் பெருக்கிக் கொண்டார்கள். அதன் காரணமாக ராஜபுதனத்து அரசர்கள் பாதிக்கப்பட்டனர். பஞ்சாபில் சீக்கியர்கள் வலுமிகுந்து விளங்கினர். சீக்கிய மன்னனுன ரஞ்சித்சிங் தனது பன்னிரண்டாவது வயதிலேயே பதவியேற்ருன். அடிக்கடி ஆப்கானியர்களுடன் போரிட்டு அவர்களை வெற்றி கொண்டான். லாகூரைக் கைப் பற்றி அதைத் தனது தலைநகராக்கிக் கொண்டான். சீக்கியரின் புனித ஸ்தலமான அமிர்தசரஸ் கி.பி. 1802-ல் அவனுடைய அதிகாரத்துக்குள் வந்தது.

மற்றும் கங்ரா, லடாக், ஹஸாரா, ஜம்மு, காஷ்மீர், மூல் தான், பெஷாவர் ஜில்லாக்கள் அவனது ஆட்சிக்கு உட் பட்டன.

இக்காலத்தில் பிண்டாரிகள் எண்ணிக்கையில் மிகுந்த னர். அவர்கள் மராத்திய ராணுவத்தின் ஒரு பகுதியைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு சம்பளம் என்று எதுவும் கொடுக்கப் பட்டதில்லை. கொள்ளையடித்து வாழ்ந்தவர்கள் அவர்கள். பிரிட்டிஷ் இந்தியாவில் வசித்த மக்களுக்கு அவர் களால் பெரும் தொல்லைகள் விளைந்தன.

ராஜ புத்திர இனத்தைச் சேர்ந்த கூர்க்காக்கள் பிரிதிவி நாராயணனின் தலைமையில் நேபாளத்தின் பழைய அரச பரம் பரையை நிர்மூலம் செய்தனர். படிப்படியாக அவர்களது ராணுவம் பெருகியது. அவர்களது அதிகாரம் ஸட்லெஜி லிருந்து பூடான் எல்லை வரை பரவியிருந்தது.

கி.பி. 1813-ல் ஹேஸ்டிங்ஸ் கவர்னர் ஜெனரல் பதவி ஏற்றான். இந்திய மன்னர்களுடன் போரிட்டு அவர்களது ராஜ்யத்தை ஆக்கிரமிப்பது அவனுடைய கொள்கையாக இருந்தது. நேபாளத்து கூர்க்காக்களுடன் முதலில் அவன் போரிட்டான். போரின் ஆரம்ப கட்டத்தில் ஆங்கிலேயர் தோல்வியே கண்டனர். ஆனால் முடிவு வேறு விதமாக இருந் தது. கார்வால், குமாயூன் போன்ற பகுதிகளை கூர்க்காக்கள் இழந்தனர். கடைசியில் நேபாள அரசவையில் ஒரு ரெஸி டெண்டை ஏற்றுக் கொள்ள அவர்கள் சம்மதித்தனர்.

போரின் தொடக்கத்தில் கூர்க்காக்களிடம் ஆங்கிலேயர் பெற்ற தோல்வி பிண்டாரிகள், மராத்தியர்கள் ஆகியோர் மத்தியில் பெரும் உள்ளக் கிளர்ச்சியைத் தோற்று வித்தது. ஹேஸ்டிங்ஸ் அவர்களது செல்வாக்கை ஒழித்துவிடத் திட்ட மிட்டான். கி.பி. 1817-ல் பிண்டாரிகளைச் சூழ்ந்து அவர் களது அமைப்பைக் கலைத்தனர் ஆங்கிலேயர். அடுத்து பேஷ்வா சரணாகதி அடையும்படி கட்டாயப் படுத்தப்பட் டான், போன்ஸ்லேயின் ராணுவம் தோற்கடிக்கப்பட்டது.

நாகப்பூரில் பிரிட்டிஷாரின் பாதுகாப்பில் ஒரு அரசன் நியமிக்கப் பட்டான். ஹோல்காரும் சிந்தியாவும் நிலை குலேந்தனர். மராத்திய அதிகாரம் முழுமையாக நசுக்கப்பட்டது.

இதர மன்னர்களுடன் தொடர்ச்சியான பல ஒப்பந்தங்கள் செய்யப்பட்டன. ஆங்கில அதிகாரம் கன்யாகுமரியிலிருந்து ஸட்லெஜ் வரை பரவியது.

# 19. கி. பி. 1824 - கி. பி. 1857

இந்திய மன்னர்கள் படிப்படியாகத் தங்கள் செல்வாக்கை இழந்து வந்தார்கள். கி.பி. 1831-ல் மைசூர் மன்னன் பதவியிலிருந்து நீக்கப் பட்டான். 1834-ல் கூர்க் அரசனுக்கும் அதே கதி நேர்ந்தது. இரண்டு ராஜ்யங்களும் பிரிட்டிஷ் நிர்வாகத்தின் கீழ் வந்தன. 1843-ல் சிந்து ஆக்கிரமிக்கப்பட்டது. குவாலியர் பிரிட்டிஷ் பாதுகாப்புக்குள் அடங்கிய ராஜ்யமாயிற்று.

ரஞ்சித் சிங் 1839-ல் மரண மடைந்தான். அவனுடைய மரணத்துக்குப் பின்னர் சீக்கியர்கள் ஆங்கிலேயரின் பரம விரோதிகளாக மாறினர். சீக்கிய ராணுவம் சிறந்த வீரர்களை உடையதாக விளங்கியது. மன்னனைக் காட்டிலும் ராணுவத்தின் செல்வாக்கு பஞ்சாபில் மிகுந்து விளங்கியது. சீக்கியருடன் போர் புரிய வேண்டியது விரைவில் அவசியமான ஒன்றாகிவிடும் என ஆங்கிலேயர் பயந்தனர். அவ்வாறே 1845-ல் ஹார்டின்ஜ் கவர்னர் ஜெனரலாக இருந்தபோது அவர்களுக்கிடையே போர் மூண்டு ஓராண்டுக்கு நீடித்தது. போரின் முடிவில் ஸட்லெஜை எல்லையாகக் கொண்டிருந்த —பிரிட்டிஷ் பகுதியில் இருந்த பிரதேசங்களும், ஜலந்தர்

தோப், காஷ்மீர், மற்றும் ஹஸாரா ஆகியவையும் ஆங்கிலேயர் வசம் வந்தன. ஸர். ஹென்றி லாரன்ஸ் ரெஸிடென்டாக நியமிக்கப்பட்டான். விரைவில் பஞ்சாப் முழுதும் அவனது அதிகாரத்திற்குள் வந்தது. ஜம்முவின் மகாராஜாவாக இருந்த குலாம் சிங்கிற்கு காஷ்மீரை ஆங்கிலேயர் விற்பனை செய்தனர்.

டல்ஹௌஸி கவர்னர் ஜெனரலானபோது சீக்கியருடன் மீண்டும் போர் மூண்டது. கடுமையான யுத்தத்துக்குப்பின் பஞ்சாப் பிரிட்டிஷ் ராஜதானி ஆயிற்று. பிரிட்டிஷ் இந்தியாவின் எல்லை வட மேற்கு மலைப் பிராந்தியங்களைத் தொட்டது.

அதன் பின்னர் ஆக்கிரமிப்பை விரிவு படுத்த டல்ஹௌஸி போர் முறைகளைக் கையாளவில்லை. வேறு ஒரு புதுத் திட்டத்தைக் கொண்டு வந்தான் அவன். இந்திய மன்னன் வாரிசு இல்லாமல் மரண மடைந்து விட்டால் அவனது ராஜ்யம் ஆங்கிலேயரை சேர்ந்ததாகிவிடும் என்பதே அது. வாரிசற்ற மன்னன் ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொண்டால் அந்த மகன் கவர்னர் ஜெனரலால் அங்கீகரிக்கப்பட மாட்டான். இம் முறையைக் கொண்டு ஸதாரா, பகத், உதயப்பூர், ஜான்ஸி, நாக்பூர் ஆகிய பிரதேசங்களை டல்ஹௌஸி அபகரித்தான். அதன் விளைவாக அந்த அரச வம்சத்தினர் பிரிட்டிஷ் அரசாங்கத்தை வெறுக்கத் தொடங்கினார்கள்.

இவற்றைத் தவிர 'பாதுகாக்கப்பட்ட ராஜ்யங்கள்' எனப் பல பகுதிகள் இருந்தன. அவற்றின் மன்னர்களுக்கு ஆட்சியில் எந்த விதப் பொறுப்பும் இருக்கவில்லை. அவர்கள் பெயரளவில் ராஜாக்கள் அல்லது நவாபுகள் என அழைக்கப்பட்டனர். கிழக்கிந்தியக் கம்பெனி அவர்களுக்கு உதவி நிதி அளித்தது. உண்மையான நிர்வாகம் கம்பெனி அதிகாரிகள் வசமே இருந்தது. தகுந்த சந்தர்ப்பங்கள் வந்தபோது டல்ஹௌஸி இந்த மன்னர்களுடைய ராஜா அல்லது நவாப் என்ற பட்டங்களையும் ரத்து செய்யத் தயங்கவில்லை.

1885-ல் ஆற்காடு நவாப் மரணமடைந்தான். நவாப் பட்டத்தை ரத்து செய்து அவனது பிற்காலவாரிசுகள் ஆற்காடு இளவரசர்கள் என அழைக்கப்பட வேண்டும் என்று ஆங்கில அதிகாரம் முடிவு செய்தது. இவ்வாறே தஞ்சை மன்னனும் பட்டத்தை இழந்தான். ஔத் நவாப்பின் மீது குற்றச் சாட்டுகள் கிளம்பின. எனவே 1856ல் அந்தப் பிரதேசத்தையும் ஆங்கில ஆட்சிக்குள் இணைத்து விட்டான் டல்ஹௌஸி.

டல்ஹௌஸியின் நிர்வாக முறைகள் மக்களின் மனத்தில் பெருத்த மாறுதலைத் தோற்றுவித்தன. அவர்களிடையே ஆங்கிலேயருக்கெதிராக வெறுப்புணர்வு வளரலாயிற்று. அவர்கள் உணர்ச்சி வசப்படலாயினர். ஆனால் டல்ஹௌஸி அதை சற்றும் உணரவில்லை.

இந்தியாவிலிருந்து அவன் சென்றபோது எந்த நிமிடமும் பயங்கரமாக வெடிக்கத் தயாராக உள்ள வெடி மருந்து கிடங்கு நெருப்புக்குக் காத்திருப்பதைப் போன்ற நிலையில் இந்த நாடு இருந்தது. அதைச் சற்றும் அறியாதவனாகவே டல்ஹௌஸி இங்கிலாந்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

1856-ல் கானிங் கவர்னர் ஜெனரல் ஆனான். 1857-ல் திடுமென மக்களின் வெறுப்புணர்ச்சி வெடித்துச் சிதறி விடுதலைப் போராக உருவெடுத்தது. நாடெங்கும் கொந்தளிப்பு பரவியது. மீரத்தில் இந்திய ராணுவத்தினர் அதிகாரிகளைச் சுட்டுக் கொன்று விட்டு தில்லியை நோக்கி முன்னேறினார்கள். அங்கு ராணுவத்தின் இதரபிரிவினரும் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். தில்லி அவர்கள் வசமாயிற்று, பகதூர் ஷாவை நவாப்பாக சிம்மாதனத்தில் அமரச்செய்து 'முகலாய சாம்ராஜ்யம் மீண்டும் நிறுவப்பட்டு விட்டது' என அவர்கள் அறிவித்தனர். இரண்டாம் பாஜிராவின் மகனான நானாசாகிப் கான்பூரில் தன்னை பேஷ்வாவாகப் பிரகடனப் படுத்திக் கொண்டான். புரட்சிக்காரர்களின் தலைமையையும் ஏற்றான். ரோகில் கண்டில் அதன் கடைசி சுல்தானின் பேரனை

பகதூர்கான் நவாப் ஆக அறிவிக்கப்பட்டான். ஜான்ஸியில் அதன் ராணி லட்சுமி பாய் ராணுவத்தலைமையை ஏற்று ஆங்கிலேயரை எதிர்த்துப் போரிட்டாள்.

பிரிட்டிஷ் ராணுவம் தில்லியைத் திரும்பக் கைப்பற்ற முயன்றது. ஆனால் அவர்களது முயற்சி எளிதில் பயனளிக்க வில்லை. பல மாதங்களுக்கு அவர்கள் தொடர்ந்து போரிட வேண்டியிருந்தது. நீண்ட போராட்டத்திற்குப் பின்னரே தில்லியை அவர்கள் திரும்பப் பெற்றனர், கான்பூரிலும் லக்னோவிலும் பிரிட்டிஷ் துருப்புகள் முற்றுகையிடப்பட்டன. பல மாதங்களுக்குப் பின்னரே தேவையான உதவிகள் கிட்டி அவர்கள் காப்பாற்றப்பட்டனர். மத்திய இந்தியாவிலும் பண்டல் கண்டியிலும் தொடர்ந்த ஒன்றாக நீண்ட நாட்கள் நீடித்தது. புரட்சியை அடக்கி, அமைதியை நிலைநாட்டி, நாடு முழுதும் ஆங்கில அதிகாரம் மீண்டும் ஸ்திரப்பட ஓராண்டுக்குமேல் பிடித்தது. பகதூர் ஷா ரங்கூனுக்கு நாடு கடத்தப்பட்டான். 1862-ம் ஆண்டுவரை அங்கேயே வாழ்ந்து தனது 87-வது வயதில் அவன் மரணமடைந்தான். ஜான்ஸி ராணியோ போர்க்களத்திலேயே உயிர் துறந்தாள்.

புரட்சியின் விளைவாகக் கிழக்கிந்தியக் கம்பெனி மூடப் பட்டது. இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பைப் பூரணமாக இங்கிலாந்து அரசியே ஏற்றுக் கொண்டாள்.

# 20. கி. பி. 1885 - கி. பி. 1978

இந்திய தேசிய காங்கிரஸ் 1885-ல் முதன் முதலாகப் பம்பாயில் கூடியது. அந்த முதல் கூட்டத்தில் ஒரு சிலரே பங்கேற்றனர். அவர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட

பிரதிநிதிகளாக இருக்கவில்லை. ஆயினும் அவர்கள் உண்மை யான நாட்டுப்பற்றுக் கொண்டவர்களாக இருந்தார்கள். பாரதத்தின் மீது உண்மையான அபிமானம் கொண்டவர்க ளாக ஆண்டு தோறும் கூடி நாட்டு விடுதலைக்கான பெரு முயற்சியில் அவர்கள் ஈடுபடத் தொடங்கினார்கள்.

ஆரம்பத்தில் அவர்களுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மீது அளவற்ற நம்பிக்கை இருந்தது. இந்நாட்டை ஆளும் உரிமை இந்த நாட்டு மக்களுக்கே கிட்டும் என்ற எண்ணம் மிகுந்திருந்தது. ஆனால் விரைவில் இந்த நம்பிக்கை சிதறுண் டது. இந்தியாவிலும் இங்கிலாந்திலும் ஆங்கில ஆட்சியாளர் அதைப் பொய்ப்பிக்கும் வகையிலேயே நடந்து வந்தனர்.

தேசிய உணர்வு வலுவடைந்து நாடு விடுதலையடைய வேண்டும் என்ற எண்ணம் மக்களிடையே வலுப்பெற லாயிற்று. அதற்குத் தக்கவாறு ஆட்சியாளரின் பிடிவாத குணமும் தீவிரமடைந்து வந்தது.

ஆங்கிலேயரிடம் ஒரு சிலருக்கு இருந்த சிறிதளவு நம்பிக்கையும் கர்ஸான் பிரபுவின் காலத்தில் அடியோடு மறைந்தது. வங்காளத்தை இரு பகுதிகளாகப் பிரித்தான் கர்ஸான். அது கண்டு மக்கள் கொதித்தெழுந்து பெரும் கிளர்ச்சி செய்தனர். அதன் விளைவாகப் பின்னர் வங்காளப் பிரிவினை கைவிடப்பட்டது.

முதல் உலகப்போர் தொடங்கியது. பிரிட்டனுக்கும் ஜெர்மெனிக்கும் நிகழ்ந்த கடுமையான போரின் விளைவாக பிரிட்டனில் மிகவும் நெருக்கடியான நிலைமை உருவாயிற்று. பிரிட்டனுக்கு உதவும் எண்ணம் கொண்டு பாரத மக்கள் பலரும் போருக்குச் சென்றனர். ரத்தம் சிந்தி உயிர்த் தியாகம் புரிந்தனர். இங்கிலாந்தில் பலரும் இந்த சேவை யைப் போற்றிப் புகழ்ந்தனர். உலகத்தின் எல்லா நாடுகளி லும் சுய நிர்ணய உரிமையைத் தோற்றுவிக்கவும், ஜனநாயக தத்துவத்தை நிலை பெறச் செய்யவுமே உலகப் போர் நிகழ்வ தாகப் பிரிட்டன் தம்பட்டம் அடித்துக் கொண்டது. அதன்

விளைவாக பிரிட்டனிடம் மீண்டும் நம்பிக்கை எழுந்தது. சுய ராஜ்யம் விரைவில் கிட்டும் என்ற எண்ணமும் வலுத்தது.

1917-ல் இந்தியா மந்திரி ஒரு அறிக்கையை வெளியிட்டார். படிப்படியாக இந்தியாவுக்கு சுயாட்சி அளிக்கப்படும் என்ற வாக்குறுதியைக் கொண்டிருந்தது அந்த அறிக்கை. தொடர்ந்து உலகப் போரும் முடிவடைந்துவிடவே உடனடியாகத் தங்களுக்கு விடுதலை கிட்டிவிடும் என மக்கள் எதிர்பார்த்தனர். ஆனால் ஏமாற்றமே விளைந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் காந்திஜி காங்கிரஸின் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

கிலாபத் விஷயத்தில் முஸ்லீம்கள் நம்பிக்கைத் துரோகம் இழைக்கப்பட்டனர். மக்களின் விருப்பத்துக்கு விரோதமாக ரௌலட் சட்டத்தை நிறைவேற்ற முயற்சிகள் நடந்தன. மக்களின் உணர்ச்சி வலுத்தது. நாட்டில் பெரும் கிளர்ச்சி தோன்றியது. சத்தியாக்கிரகப் போர் முறைகளைக் கொண்டே இந்த அநீதிகளைப் போக்க முயல்வது என காந்திஜி முடிவு செய்தார்.

பஞ்சாபிலும் ஆமதாபாத்திலும் மக்களிடையே கலவரம் தோன்றியது. பெருவாரியான உயிர்ச்சேதமும் பொருள் சேதமும் ஏற்பட்டன. பஞ்சாப் படுகொலையும் கடுமையான ராணுவ அடக்கு முறையும் தொடர்ந்தன.

மக்கள் ஒத்துழையாமை இயக்கத்தை மேற்கொண்டனர். பட்டம் பதவிகளைத் துறந்தனர். ஆங்கிலேயர் நிறுவியிருந்த பள்ளிக்கூடங்களையும், நீதி ஸ்தலங்களையும், அன்னியத் துணிகளையும் பகிஷ்கரித்தனர். வரிகொடா இயக்கத்துக்கும் சட்ட மறுப்புப் போருக்கும் அவர்கள் சித்தமானார்கள், நாட்டில் ஒத்துழையாமை இயக்கம் வலுப்பெறவே அரசாங்கம் கடுமையான அடக்கு முறைகளைக் கையாளத் தொடங்கியது. பல்லாயிரக்கணக்கான மக்கள் தலைவர்களைப் பின்பற்றி சிறை புகுந்தனர்.

1920-ல் ஆங்கிலேயர் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தனர். அதன் விளைவாக ஏற்பட்டிருந்த ராஜிய அமைப்பின் வேலையைப் பரிசீலனை செய்ய அவர்கள் சைமன்

கமிஷனை நியமித்தார்கள். அந்தக் குழுவில் ஏழுபேர் அங்கத்தினராக இருந்தனர். ஆனால் ஒரு இந்தியர்கூட அதில் இடம் பெறவில்லை. எனவே மக்கள் அதனைப் பகிஷ்கரித்தனர்.

ஒரு குறிப்பிட்ட காலவரைக்குள் குடியேற்ற நாட்டு அந்தஸ்து இந்தியாவுக்கு அளிக்கப்பட வேண்டும் என தேசத்தலைவர்கள் முடிவு கூறினர். அப்படி அளிக்கப்படா விட்டால் பூரண சுயராஜ்யத்தைப் பெறுவதே நமது லட்சியம் எனவும் அதற்கான போராட்டங்களைத் தொடங்குவது எனவும் கல்கத்தாவில் கூடிய காங்கிரஸ் முடிவு செய்தது. பிரிட்டிஷ் அரசாங்கம் குடியேற்ற நாட்டு அந்தஸ்தை அளிக்கத் தவறவே 1929-ல் கூடிய லாகூர் காங்கிரஸ் பூரண விடுதலையைப் பெறுவதற்கான முயற்சிகளில் இறங்குவது எனத் தீர்மானித்தது. நாடெங்கும் சட்ட மறுப்புப் போரும் வரிகொடா இயக்கமும் வலுத்தன.

1930 முதல் 1933 வரை மூன்று வட்ட மேஜை மகாநாடுகள் இங்கிலாந்தில் கூட்டப்பட்டன. அதில் இரண்டாவது மகாநாட்டில் மகாத்மாஜி கலந்து கொண்டார். இம்மகாநாடுகள் கண்ட முடிவுகள் இந்திய மக்களின் சுதந்திர வேட்கையைத் தணிக்கவில்லை.

1935-ல் இந்திய அரசியல் சட்டம் இயற்றப்பட்டது. அதன் விளைவாக மாகாண சுய ஆட்சி ஏற்பட்டது.

1939-ல் இரண்டாம் உலகப்போர் தொடங்கியது. இந்தியாவின் விருப்பத்துக்கு மாறாக இந்த நாட்டை ஆங்கிலேயர் போரில் ஈடுபடுத்தினர். அதை எதிர்த்து மாகாண மந்திரி சபைகள் ராஜிநாமா செய்தன.

இதனிடையில் ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையே பிளவு தோன்றி வளரலாயிற்று. முகம்மது அலி ஜின்னா லாகூரில் முஸ்லீம் லீக் மகாநாட்டில் முஸ்லீம்களுக்குத் தனி நாடு வேண்டும், அதற்காக இந்தியா பிரிக்கப்பட வேண்டும் என்ற தீர்மானத்தை பிரகடனப்படுத்தினர்.

இரண்டாம் உலகப்போர் தீவிரகட்டத்தை யடைந்த சமயம். ஸ்டாஃபோர்ட் கிரிப்ஸ் தலைமையில் ஒரு தூது

கோஷ்டியை ஆங்கில அரசாங்கம் இந்தியாவுக்கு அனுப்பி வைத்தது. இந்திய மக்கள் அதைப் பகிஷ்கரித்தனர்.

1942-ல் மீண்டும் இந்தியாவில் புரட்சி எழுந்தது. நாடு முழுதும் கொந்தளிப்புத் தோன்றியது. எங்கு திரும்பினாலும், 'வெள்ளையனே வெளியேறு' என்ற கோஷம். 'செய்யுங்கள், அல்லது செத்து மடியுங்கள்'—இந்த லட்சியமே மக்கள் உள்ளங்களில் குடிகொண்டிருந்தது.

நாட்டு விடுதலைக்காக எண்ணற்ற மக்கள் புரட்சித் தீயில் குதித்தனர். கணக்கற்ற ஆண்களும், பெண்களும், சிறுவர்களும், சிறுமிகளும் தியாக வேள்வியில் குதித்து இந்த நாட்டின் விடுதலைக்காக, அதன் மேன்மைக்காகத் தங்கள் ரத்தத்தை சிந்தி உயிர்த் தியாகம் புரிந்தார்கள். சிறைப் பட்டு கணக்கற்ற துயரங்களை அனுபவித்தார்கள்.

சுபாஷ் சந்திர போஸ் நாட்டை விட்டு வெளியேறி, ஜப்பானிய அரசின் அனுமதியுடன் இந்திய தேசிய ராணுவத்தை உருவாக்கினர். ஜப்பானியர் வசம் இருந்த இந்தியப் போர்ச் சைதிகளைக் கொண்டு இந்த ராணுவம் அமைந்தது. வடகிழக்கில் இந்த ராணுவம் இந்தியாவின் மீது படையெடுத்தது. ஆனல் பிரிட்டிஷார் நாட்டினுள் நுழைய விடாமல் இந்த ராணுவத்தைத் தடுத்து விட்டனர்.

உலகப் போரின் முடிவு பிரிட்டனுக்கு சாதகமாக இருந்தது. 1945-ல் லேபர் கட்சி பிரிட்டனில் ஆட்சிக்கு வந்தது. 1946-ல் பிரிட்டன் காபினெட் குழுவொன்றை இந்தியாவுக்கு அனுப்பியது. இந்தியத் தலைவர்களுடன் அந்தக் குழு, சுதந்திரம் அளிக்கும் திட்டம் குறித்த பேச்சு வார்த்தைகளை நடத்தியது.

இந்தத் திட்டத்தின்படி ஓர் இடைக்கால சர்க்கார் அமைக்கப் பட்டது. இந்தியாவின் அரசியல் சட்டத்தை முடிவு செய்ய ஒரு அரசியல் நிர்ணய சபையும் அமைக்கப் பட்டது. இதனிடையில் முஸ்லீம் லீக் தன்னுடைய பாகிஸ்தான் கோரிக்கையை வலியுறுத்தத் தொடங்கியது. நாட்டில் இனக் கலவரங்கள் தோன்றலாயின. இந்தக் கலவரங்களில் ஆயிரக் கணக்கானோர் உயிரிழந்தனர்.

லார்ட் மவுண்ட் பாட்டன் இந்தியாவின் வைசிராயாக நியமிக்கப்பட்டார். காங்கிரஸ்—முஸ்லீம் லீக் கட்சித் தலைவர்களுடன் அவர் பேச்சு வார்த்தைகள் நடத்தினார். நாட்டை இரண்டாகப் பிரித்து இந்தியன் யூனியன்—பாகிஸ்தான் என இரண்டு நாடுகளாக்குவது அவர் திட்டமாக இருந்தது.

1947, ஆகஸ்ட் 15 அன்று பாரதம் சுதந்திரம் பெற்றது. பாகிஸ்தான் ஒரு புதிய சுதந்திர நாடாகப் பிறந்தது.

லார்ட் மவுண்ட் பாட்டன் சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் ஆனார். ஜவாஹர்லால் நேரு முதல் பிரதமர் ஆனார். மவுண்ட் பாட்டன் ஓய்வு பெற்ற போது ராஜாஜி கவர்னர் ஜெனரல் ஆனார். 1950, ஜனவரி 26 அன்று பாரதம் ஒரு குடியரசு நாடாயிற்று. ஜனாதிபதி நாட்டின் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

பாரதத்தின் முதல் ஜனாதிபதியாக பொறுப்பேற்றவர் டாக்டர் ராஜேந்திர பிரசாத். பின்னர் அவரைத்தொடர்ந்து அந்தப் பதவியை, டாக்டர் ராதாகிருஷ்ணன், டாக்டர் ஜாகிர் ஹுசேன், வி. வி. கிரி, பக்ருதீன் அலி அகமது ஆகியோர் வகித்தனர். இந்தியாவின் இன்றைய ஜனாதிபதி திரு. நீலம் சஞ்சிவ ரெட்டி.

நேரு சுமார் பதினேழு ஆண்டுகள் பாரதப் பிரதமராக இருந்தார். அவரைத் தொடர்ந்து அந்தப் பதவியை வகித்தவர்கள் : லால்பகதூர் சாஸ்திரி, இந்திரா காந்தி. இன்றையப் பிரதமர் மொரார்ஜி தேசாய்.

அடிமைத் தளையை நீக்கப் பாடுபட்டு உயிர்த்தியாகம் புரிந்த இந்த நாட்டின் புத்திர ரத்தினங்களை சுதந்திர பாரதம் என்றும் மறக்க முடியாது. அவர்கள் ஏற்றி வைத்த தியாகத் திருவிளக்கு நிரந்தரமாகச் சுடர் விட்டுப் பிரகாசித்து நமக்கு வழி காட்டும் ஒளி விளக்காகத் திகழுமாக.

வாழிய பாரத மணித் திருநாடு!



